உ

கடவுள் துணை.

# மருமக்கள் துயர அம்மாவனை.

இஃது,

சித்திரக்கவி

செஞ்சிமாநகரம்

ஏகாம்பரமுதலியாரவர்களால்

இயற்றப்பட்டு,

ம-ா-ா-ஸ்ரீ,

தி. சின்னசாமிப்பிள்ளையவர்களால்

பார்வையிட்டு,

பூவிருந்தவல்லி

சுந்தரமுதலியார் குமாரர்

பூ. சு. குப்புசாமி முதலியாரது

ஸ்ரீசுந்தரவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1906,

சென்னை: புரசை;

உ

கடவுள் துணை.

# மருமக்கள்துயர அம்மானை

## அட்டவணை.



உ

கடவுள் துணை.

## ரிஜிஸ்டர் அறிவிப்பு.



இப்புத்கம் தேவையானவர்கள் மேல்கண்ட பூ. சு. குப்புசாமிமுதலியாரிடம் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

இப்படிக்கு,

பூ. சு. குப்புசாமி முதலியார்.


ஸ்ரீசுந்தரவிலாசம் பிரஸ்;—பிரம்பூர் பாறக்ஸ்போஸ்ட் மதராஸ்.



உ

கடவுள் துணை.

# மருமக்கள் துயர

## அம்மானை.

### விநாயகர் வணக்கம்.

விருத்தம்.

அருமைசேர்மாமிவீட்டி லன்புடன்வாழவந்து
மருமக்கள்பட்டுவெய்யும் மாதுயரதனைப்பார்மேற்
பெருமைசேர்தமிழினாலே பேசவம்மானையாக
மரைபுகழ்கரிமுகத்தோன் மலரடிவணங்குவோமே.

### விநாயகர் தோத்திரம்.

வெண் செந்துறை.

ஆனைமுகப்பிள்ளையரே ஐங்கரரேமுன்னடவாய்
மோனமுதலான முகுந்தன்மருகோனே
சத்திக்கணபதியே சதுராகமுன்னடவாய்
அத்திமுகத்தோனே அரனார்திருமகனே
கரிமுகப்பிள்ளையரே கணபதியேமுன்னடவாய்
பிரியமாய்மருமக்கள் படுகுந்துயர்பாட
அரியாச்சிறுவன்வாயில் அன்பாகவருவதற்கு
துரிதமுடனுகுவேறி துணையாகநீவருவாய்
குற்றங்கள்வாராமல் குறையொன்றும் நேராமல்
சித்தமுடனென்னாவில் சீராய்குடியிருந்து
ஆதிக்கணபதியே ஐயரேமுன்னடவாய்
சோதியாய்நின்றிலங்குஞ் சோதியுமைபுத்திரனே
பாடவேயெந்தனுக்கும் பகவானே யிப்பொழுது
கூடத்துணையிருந்து கொப்பெனவே முன்னடவாய்.

(சுப்பிரமணியர் துதி.)

ஆறுமுகத்தோனே ஆயன்மருகோனே
கருத்துவைத்தெந்தனை நீ காத்தருளவேணுமையா
மாதுவள்ளிநாயகனே மயேஸ்பரியாள்புத்திரனே
தீதிலாமயிலேறும் திருத்தணிகைவேலவனே

மருமக்கள் துயரதனை மானிலத்திலேயோத
சிருவனுடனென்னாவில் செந்திற்பதி நீயிருந்து
வேலவனேசீலவனே வெய்யவினைகளெல்லாங்
காலனணுகாமல் கர்த்தனே நீயுமின்றுக்
கூடக்குடியிருந்து குற்றங்கள்வாராமல்
பாடவேயெந்தனுக்கு பகவானே வந்துறையும்

(சரஸ்வதி துதி.)

தாயேசரஸ்வதியே சதுர்முகனார்தேவியரே
தூயமருமக்கள் துயரஅம்மானைபாட
வெண்தாமரையதனில் விளங்கப்பிரந்தவளே
வண்ணமுடனிப்பொழுது வகையாக யென்னாவில்
சொந்தமுடன்பாடுதற்கு தோகையேயிப்பொழுது
வந்துகுடியிருப்பாய் வையம்புகழ்வல்லவையே
மலரில்பிரந்ததொரு மாதாவேயுந்தன் திருக்
கமலபதங்களுக்குக் காளைசருணமம்மா.

## கதையின் வரலாறு.

வெண்செந்துறை.

மருமக்கள் துயரதனை மானிலத்திற்சொல்லுகிறேன்
உருமையுடன்செவிகொடுத்து உத்தமரேகேட்டிடுங்கள்
இந்துதேசமென்னும் யெழிலானமின்னகரில்
விந்தையுடன்வாழுகின்ற யிந்துக்கள் நம்மவரும்
கண்ணனமைந்தற்கெல்லோ காரிழையைத்தான்தேடி
வண்ணமணங்கள்செய்து வாழவந்தமருகிகளை
மாமியும்நாத்தினியும் மச்சினிமாரானவரும்
பூமியிலவர்செய்யும் பொல்லாக்கொடுமையிது
கெட்டவழக்கமென்று கருத்தினிலெண்ணமல்
முட்டநினையாமல் முன்பின்னறியாமல்
நிலத்தில்நடந்துவரும் நாகரீகந்தெரியாமல்
கலியுகக்காலமென்று கருத்தினிலெண்ணமல்
முன்னவர்கள்செய்துவந்த முக்காலப்பழக்கமது
இன்னமவரைவிட்டு ஏகாமலிப்பொழுதும்
செல்வர்கள்வீடாயினும் சிறுமையோர்வீடாயினும்
புல்லவேசொல்லுவேன்கேள் புதிதாகத்தான்வருகும்

மருகிகள் தான்படுகும் மருங்கொடுமைமெத்தவுண்டு
மருகியெனவீட்டிற்கு மாதொருத்திவந்துவிட்டாள்
அவளையவ்வீட்டிற்கு யடிமைவேலைபுரியும்
பவமேபுழுக்கச்சிப்போற் பார்க்கமதிப்பாகும்
சின்னவயதுள்ள சீரார்மருகிகட்கும்
உண்ணும்நற்புத்திகளும் ஒடுக்கம்பழக்கங்களும்
குடித்தனஞ்செய்யுமொரு கூர்மைமுறைமைகளும்
நடத்திவருவதுவே நற்பழக்கம்மாமிகட்கு
கற்றுக்கொடுப்பதுவே காரியமானதுவாம்
சுற்றவிசாரணையும் செய்துவருதல்நன்றாம்
அப்படிக்கில்லாம லிக்காலமாமிமார்கள்
செப்பொணாகொடுமையது செய்வதுதருமமோதான்



## கமலம்பாள் துயரம்.

ஏந்திழையேதங்கையரே யென்துயரைக்கேளுமம்மா
வாழவந்தயென்குறையை வஞ்சியரேசொல்லுவேன்கே
தாலியதுகட்டிகொண்டு தையலரேயானுமல்லோ [ள்
மாமியார்வீட்டுக்கு மாதுநான்வந்தநாளாய்
நான்படுங்கஷ்டங்களை நவிலவுமாகுமோதான்
கடவுளொருவரல்லோ கண்டறிவாரெந்தன்கஷ்டம்
மற்றவரறிவாரோ மாதுயெந்தன்குறையை

வேணுமென்றுயெண்ணியே நான்வெகுபாடுபட்டாலும்
எந்தனிடமாமியாற்கு யேற்கையதுஒன்றுமில்லை.
சொட்டுகள்சொல்லாமல் சும்மாய்விடுவதில்லை
ஏதேனுமோர்குற்ற மென்மீதில்சொல்லிடுவாள்
இப்படிக்குமாமியவள் யென்னைவதைப்பதுடன்
ஏழரைநாட்டுசெனி யெண்ணமிட்டுவந்தாற்போல்
வாழைகெடுக்கவந்த வலகைபோலெந்தனுக்கு
போதாகுறைக்குவொரு பொன்னியம்மன்குறைபோல்.
எனக்கொருநாத்தியவ ளிருந்தல்லோதங்கையரே
படுத்துமிமிசைகளைப் பகரக்கணக்குமில்லை
செய்யுமிமிசைகளைச் சொல்லமுடியாது
அந்தபுண்ணியவதி அதிகாரம்சொல்லுவேன்கேள்
நல்லதோர்சேலைதன்னை நானுடுத்தலாகாது
எண்ணையிட்டுத்தலைவாரி யான்முடிக்கக்கூடாது
பூமுடிக்கலாகாது பொட்டுவைக்கப்போகாது
உள்ளநகைகளையும் உடலில்தரிக்கொணாது
பார்த்தால்பொருக்காளே பழிகாரிநாத்தியவள்
கண்டால்பொருக்காளே காதகிநாத்தியவள்
இத்துடன்போச்சுதென்று யெண்ணாதேதங்கையரே
கணவனுடனே நான் கடிகைநேரமாகிலும்
ஆறியமர்ந்தலவோ ஆசைபாசங்களோடு
பேசவுமெந்தனுக்குப் பாவையரேநேரமுண்டோ
என்னநான்செய்வனம்மா எந்தன்தலைவிதிக்கு
விடியகாலமெழுந்து வீட்டிலுள்ளவேலைகளை
செய்துமுடிக்கவேண்டும் சித்தப்படுத்தவேண்டும்
சமையல்கள்செய்யவேண்டுஞ் சகலமமைக்கவேண்டும்
வென்னீறுவைக்கவேண்டுந் தண்ணீர்விளாவவேண்டும்
புருஷனுக்கன்னமிட்டு பணிவிடைகள்செய்யவேண்டும்
பாலரையுங்கார்க்கவேண்டும் பாலுங்கொடுக்கவேண்டும்
இவ்வளவுவேலைகளை யேந்திழையேசெய்துவிட்டு
என்வருத்தம்பாராமல் யேகியேயக்ஷணமே
நண்ணயமாமியோடு நாத்தியரம்மாளை
வேண்டிவேண்டிஒருஜாமம் வருந்தியேதானழைத்து
அன்னமிடுவதற்குள் அன்புள்ளதங்கையேகேள்
என்னுடையப்பாட்டை யேதென்றுயானுரைப்பேன்
மூன்றுங்கட்டுக்கெல்லோ மொய்க்குழலேவந்துவிடும்.
சாப்பிட்டுமாமிநாத்தி சதுராகப்போனபின்பு

அதன்பிறகுயானுமல்லோ அன்னமுந்தான்புசித்து
மற்றுமுள்ளவேலைகளை மறவாமல்செய்வதற்குள்
ஏந்திழையேநல்லபகல் இரண்டுமணியாகும்
சாற்றவேநல்லபகல் சாமமுமூன்றாகும் [லோ
அதற்குமேல்கொஞ்சம்நேரம் அரிவையரேயானுமல்
புத்தகத்தைத்தானெடுத்துப் படிக்கலாமென்றாலோ
கண்டெல்லோமாமியாரும் காய்ந்தவளுமோர்பக்கம்
என்னடிபுத்தகத்தை யெடுத்துநீயென்னேரம்
கட்டியழுகுராயே காரணமென்னடியோ
புருஷனுக்குச்சம்பாதித்துப் போடப்படிக்குறாயோ
அல்லது நீபடிப்பு யாற்குப்படிக்குராயோ
கள்ளபுருஷனுக்கு கடிதங்கள்தானெழுதி
உள்ளுக்குள்ரகசியங்கள் வோதப்படிக்குராயோ
எழுதிவரவழைக்க பெண்ணம்வைத்துபடிக்குராயோ
மூன்றுபடிப்புமெல்லோ மூசியாமல்தான்படித்து
பாசுகள்செய்தெலவோ பார்க்கவேபேருபெற்ற
மூண்டங்கள்வீட்டிலே முறண்டெல்லோதூங்குவதை
கண்டுவரியாயோ காணவேவையகத்தில்
அடுப்பூதியுந்தனுக்குப் படிப்பில்லாவிட்டாலிப்போ
முழுகியேபோய்விடுமோ மூதேவியுந்தனுக்கு
படிப்பாசெருப்பாவென்று பலவாராய்தான்பேசி
தாருமாராகப்பேசி தான்வைவதல்லாமல்
நாத்தினியானவளும் கூத்தனைப்போல்நின்று
குசுகுசென்றுமந்திரங்கள் கூசாமல்தானோத
இல்லாதும்பொல்லாது மெடுத்துமிகக்கூற
மகளுடையபேச்சையல்லோ மாமியார்தான்கேட்டு
அவள்பேச்சும்பேச்சுகளை யாரணங்கென்னசொல்வேன்
நாக்கழுவப்பேசிடுவாள் நட்சத்திரமிற்றுவிழ
வாயில்வந்தபடியாய் வம்புந்தும்புமாகவைவாள்
கேளடித்தங்கையரே வாழவந்தயென்கொடுமை
இங்கேதானிப்படி யிருக்குதேயென்றெண்ணி
என்னுடன்தான்படித்த யெதிர்வீட்டுசுந்திரமிடம்
போய்ப்பேசியிருந்தாகிலும் பொழுதைகழிப்பமென்றால்
அங்கையும்வந்துயிந்த அரும்பாவிமாமிசொல்வாள்
அவிழ்த்துவிட்டகழுதையைப்போல் அடியாசிரிக்கிதி
ஊருராய்சுற்றுதற்கு ஓடுறாயென்னவென்றும் [னம்

இப்படிக்குமங்குவந்து யெழவுகொடுப்பதினால்
பேசாமல்வீட்டிலேயே குந்திருப்பமென்றாலோ
எந்தனுக்கோமனது யிடமுங்கொடுக்கவில்லை
அல்லது அப்படியே யிருந்துத்துலைந்தாலும்
அதற்குமனம்பொறுமல் அம்மாமிசொல்வதைக்கேள்
குட்டிச்சுவர்போலலே குந்திகொண்டிருக்கிறாயே
இடிச்சுவர்போலாக யிருக்குறாயென்னடி நீ
ஏதாவதுவேலை செய்யப்போகாதோவென்பாள்
இந்ததொணப்புக்குதான் யென்னதான்செய்வதென்று
அடுப்பாகிலுமூட்டி அன்புள்ளதங்கையேகேள்
இராச்சமையலாகிலுஞ் செய்வமென்றுபோனாலோ
அப்போதுயென்மாமி அதட்டியேயேதுரைப்பாள்
என்னடியிப்பொழுது யிராத்திரிசமையலுக்கு
பத்துமணிசாப்பாட்டிற்கு யித்தனை துரிதமென்ன
வேலையத்தவளேபோய் வேரவேலைபாருமென்பாள்
இத்தோடொழிந்ததென்று யெண்ணாதேயென் துயரம்
சமையல்முதலானதெல்லாம் சட்டமாய்செய்தபின்பு
உடம்புகசகசென்று வூருதுவேர்வையென்று
குளித்துத்தலைவாறிக் கொண்டையுந்தான்போட்டு
பொட்டிட்டுநல்லதொருப் புடவையுடுத்தினாலும்
கண்டாலேமாமியாரும் கண்பிதிங்கியேதுரைப்பாள்
தாசிபோல்சிங்காரித்து தளுக்குங்குலுக்குங்காட்டி
* ஒடக்கால்தெருபோக உத்தேசங்கொள்ளுறாயோ
கள்ளமாப்பிள்ளைதேட கருத்தினிலெண்ணுறாயோ
என்றெல்லோமனமுருக யெடுத்தவளும்பேசுகிறாள்
இவ்விதிக்கென்னசெய்வேன் யேந்திழையேதங்கையரே
குளிக்காதிருக்கலா மென்றாலோகேளடியே
உடம்புசகிக்கவில்லை யொருனாள்பொறுப்பதற்கு
சகிக்கலாமென்றெலவோ சாதித்திருந்தாலும்
இரவினில்யெஜமான்வந்து என்னையுந்தான்பார்த்து
அடிபெண்ணேயென்றவரு மதட்டியேயேதுகேழ்ப்பார்

---

* சென்னையில் ஒடக்கால்தெரு என்பது ஒன்றுண்டு இது ஒய்டே யுகால் என்றிருந்து ஒடக்கால் எனக்காலக்கிரமத்தில் மருவியது இங்கு விலைமாதர் அதிகம் சிலகாலத்துக்குமுன் அத்தெருவிற்செல்லும் ஆட்வர் மீண்டுந்திரும்புவது கஷ்டமெனப் பிரசித்தமானபேச்சு.

குளிக்கக்கூட வுனக்கு கொஞ்சம் நேரமில்லையோ
சுத்தமாயுந்தனுக்குச் சுரணையுந்தானில்லையோ
பரச்சியாகிலுங்கொஞ்சம் பார்க்கசுத்தமாயிருப்பாள்
பரச்சியிலுங்கேடுகெட்ட பரச்சியைப்போலானையே
தண்ணீர்கிடையாதா தான்கிணறும்பாழாச்சா
உனக்குவந்தகேடுகாலம் யென்னடிமூதேவி
உன்னோடுவாழ்வதற்கு கழுதையைக்கட்டியுமே
வாழலாமென்றவரும் வாயில்வந்தப்படிக்கு
சொல்லாதுஞ்சொல்லுகிறர் ஜென்மம்பதருதம்மா
எந்தவழியான்போவேன் ஏந்திழையேதங்கையரே
ஏரவேசொன்னாலும் எருதுக்குக்கோபமென்றும்
இரங்கவேசொன்னாலும் மொண்டிக்குகோபமென்றும்
கூறுமொழிபோலே குமிங்கினேன்தங்கையரே
இருதலைக்கொள்ளியென்னு எரும்புபோலிருக்குரேனன்
நின்றுதவிக்குறேநான் நிலையொன்றுமில்லாமல்
மாமிநாத்திகள்செய்யு மாகாகொடுமைகளும்
காலையிலே நடக்கும் கஷ்ட நிஷ்டூரேங்களும்
இந்த-சங்கதியெல்லாம் யெடுத்தெல்லோதங்கையரே
புருஷனிடம்சொல்வோமென்று பார்த்தாலோதங்கைய
அப்போதென்னவொரு அனர்த்தம்வருமேயென்று[ரே
எண்ணுதுமெண்ணுகுது யென்செய்துதுலைப்பதென்று
யோசிக்கயோசிக்க என்மனம்பதைக்குறது
எத்தனை நாளைக்குத்தான் யிந்தவிதக்கஷ்டங்களை
பட்டுத்துலைப்பதுநான் பகருமம்மாதங்கையரே
என்றல்லோகமலாம்பாள் யெடுத்துமிகக்கூற
தங்கையந்தக்காந்திமதி தான்கேட்டுவப்பொழுது
கமலம்மாளைநோக்கி காந்திமதியே துரைப்பாள்
உன்னுடையபுருஷன்வீட்டில் உத்தமி நீபடுங்கஷ்டம்
செவியாரக்கேட்டெலவோ சிந்தைநொந்துமனம்வாடி
என்னிருகண்ணீரும் ஆருய்பெருகிறது
என்னநாம்செய்வதுதான் யேந்திழையே நம்மநாட்டில்
வீட்டுக்குவீடெலவோ யிப்படிதானிருக்கிறது
என்னுடையதுயரத்தை யேந்திழையேகேட்டேயானல்
உனக்குமேலென்மணங்கு உத்தமியேதானிருக்கும்
ஆகினுமென்குறையை அக்காளுன்சொல்லிவாறேன்
கலங்காமனமுடனே கவனமுடன்கேட்டிடுவாய்
சுருக்கமுடன்சொல்லிவர்றேன் சுந்தரியேகேட்டிடுவாய்







# காந்திமதிதன் துயரத்தை கமலம்பாளிடஞ் சொல்லல்.

என்றெல்லோகாந்திமதி யெழிலாகவப்பொழுது
கமலம்பாள்முகம்பார்த்து காந்திமதியே துரைப்பாள்
நீகேளுமப்பியரே நிலைக்கவேயுந்தனுக்கு
ஒருமாமியொருநாத்தி யோடுபோராடுகிராய்
என்குறையைச்சொல்லுகுறே னிதைகேளுமப்பியரே
மாமிமார்மூன்றுபேரு நாத்தினிமார்நான்குபேறு
ஓரகத்தியெந்தனுக்கு வுண்டக்காஐந்துபேறு
இத்தனைபேர்மத்தியிலே யிளைத்தவள்நானொருத்தி
ஊருக்கிளைத்தவன் பிள்ளாக்கோயிலாண்டி
இளைத்தவன்பெண்டலவோ யெல்லோர்க்குமச்சினச்சி
என்றமொழிக்கொப்பா யிருந்தெல்லோ நானொருத்தி
பட்டுவரும்பாடுகளைப் பகரவுமாகுமோதான்
நானொருபெண்பிள்ளையாய் நாயங்கள்சொல்லவந்தேன்
எங்கையோயென்மனது யேந்திழையேபோகுறது
நம்முடையமாமிகட்கோ நாயகமேசொல்குறேன்கேள்
படிப்பென்றபேர்வழியோ பகரவேபூஜ்ஜியந்தான்
எழுத்தின்வாசனைகளை யேதுமறியார்கள்
மருகிகளைவைத்துகார்க்க மாமிகளும்வகையறியார்
பாதங்கள்தான்தேய பத்துதரம்நடந்து

கண்ணன்மந்தனுக்கு கன்னிகையைதாருமென்றும்
வண்ணமொழியுரைத்து வாகாகத்தான்பேசி
கண்ணை நிமையதுவுங்காற்பதுபோல்காற்பேனென்றும்
யென்மகளுக்குமேலாய் யெழிலாகக்காற்பேனென்றும்
பெண்ணைகொள்ளுமவரைக்கும் பேசிநயமாக
எண்ணம்வேராகவைத்து யிருந்தெல்லோமாமிர்கள்
தாலிகட்டிமுடிந்தவுடன் தான்கேளுமப்பியரே
அவர்வீட்டுவேலைசெய்யும் அடிமையைபோல்பாற்பார்
அதற்கேற்றப்படியாக அப்பியரே நாமுமேதான் [கள்
முழுதுமறியாத மூடர்களாயிருப்போமானால்
அத்தைநாத்தினிசொல்லும் அகடானவார்த்தைகட்கு
எதிராய்ஜவாப்புமல்லோ யிபம்பலாஞ்சரிசரியாய்
அல்லாருசொல்ல நமக்காகலையே அப்பியரே
எதிர்நின்றுபேசமன மில்லையேயென்செய்வது
அக்கையரேயின்னமொரு அனியாயஞ்சொல்லுவேன்
என்னுடையதந்தையுரும்யெழிலாகயெந்தனுக்கு[கேள்
புடிப்பிக்கயென்னையுமே பள்ளிக்கனும்பும்போது
கண்டெல்லோயென்பாட்டி கிழவியுமேயேதுரைப்பாள்
பிள்ளையைத்தானழைத்து பேசாதெல்லாம்பேசி
பெண்ணைகெடுக்கவையோ பார்க்குராயென்னடா நீ
படுபாவியென்றெலவோ பாட்டியவள்தான்பேச
என்தந்தையவள்மொழியை எள்ளளவுங்கேளாமல்
என்னைபள்ளியில்வைத்து எனக்குமேயிவ்வளவு
அறிவைவிசாலித்து அன்பாகத்தானும்வைத்தார்
அவருடையப்புண்ணியமே அக்கயரேயெந்தனுக்கு
கல்வியழகெலது வேரழகுவொன்றுமில்லை
அறிந்தவரறிவார்கள் அருங்கல்வித்தன்னழகை
தெரிந்தவர்கள்தேருவார்கள் திகழானகல்வியினால்
ஆகினுமிப்பொழுது அப்பியறேசொல்லுவேன்கேள்
நம்முடையமாமியோடு நாத்தினியானவரும்
இவ்வாறுநம்மோடு யென்னேறம்வாதுமிட்டும்
கொடுமைகள்புரிகுவதும் குமிங்கிநாமழுகுவதும்
வருத்தமும்நாமடைந்து வாடிமிகவிருக்க
அதைகண்டநம்முடைய ஆளனாவர்தமக்கு
நம்முடமீதினிலே நாட்டங்களில்லாமல்
இஷ்டங்களில்லாமல் யேகிப்பிறர்மனைக்கு
இச்சித்துச்செல்லுவதும் யெல்லாமேயாகிறது

என்னாநாம்செய்வது என்னுடைய அப்பியரே
நம்முடையகருமமென்று நாமெண்ணிக்கொண்டாலும்
முன்னாள்வினையென்று மொய்க்குழலேயிருந்தாலும்
இப்போநமக்கெலவோ யெழிலாய்கிடைத்திருக்கும்
அரசாங்கத்தார்கள்வெகு யான நல்லோர்களென்றும்
உலகமுழுதிலுமே யோதுகுரார் அப்பியரே
பிறர்துக்கம்பார்த்தவர்கள் பொருக்காத நல்லவராம்
ஆதலால் அக்கையரே யாங்காங்குஉள்ளதொரு
கல்வியில்தேர்ந்ததொரு கண்மணியாம்பெண்களெல்லா
தங்கள் தங்களுக்குள்ள தக்கதோர் நாயமான [ம்
குறைகளையல்லாம் நாம் கொண்டுமே நன்றாக
அப்போதுக்கப்போது அரசாங்கத்தார்க்குமுன்னே
கொண்டுவருவோமானால் கூறக்கேளப்பியரே
காருணியமுள்ளதொரு கவனர்மெண்டார்களுமே [லோ
கொஞ்சத்திற்குகொஞ்சமேனும் கோதையரே நாமுமல்
சுகப்படயேதுவாக செய்வாறெண்றெண்ணுகுறேன்
என்றெல்லோகாந்திமதி யியம்பிமுடித்தாளே.



## பத்மாவதியின் துயரம்.

பத்மாவதியென்னும் பங்கிளியால்தானுமல்லோ
ஆசைசகோதரியை யன்பாகத்தானழைத்தும்
தன்னுடையத்துயரமதை தையலருங்கூறலுற்றாள்
கேளாய்சகோதரியே கன்னியுடையென் துயரை

கவனமாய்க்கேட்டிடுவாய் காதுகொடுத்துமிப்போ
சீராகக்கேட்டிடுவாய் செவிகள்கொடுத்துமிப்போ
விடியுமுன்னெழுந்திருந்து விளம்பக்கேள்சகோதரியே
வீடுமுழுதுமல்லோ விரைவாய்பெருக்கவேணும்
கொப்பெனவேமெழுகி கோலமிட்டாகவேணும்
பாத்திரங்கள்முழுதும் பார்த்துத்துலக்கவேணும்
மாட்டுசாணியைவாறி மலைபோலேகொட்டவேணும்
அவைகளைபிசைந்துருட்டி எருத்தட்டியாகவேணும்
இவ்வளவுவேலைகளை யானொருத்திசெய்கவேணும்
பால்கள்கறக்கவேண்டும் பதமாகக்காச்சவேணும்
மோர்கள்கடையவேண்டும் மொத்தைவெண்ணையாவே [ணும்
நெல்லைவேவித்துலர்த்தி நன்றாககுத்தவேணும்
தண்ணீர்வேண்டுமளவும் தான்கொண்டுசேர்க்கவேணு [ம்
இப்பெருங்குடும்பத்திற்கு நானேசமைக்கவேணும்
இத்தோடுநில்லாது இன்னங்கேள்சகோதரியே
மாமன்மாமிபுருஷன் மச்சினர்முதலோர்க்கும்
தண்ணீருங்கொண்டுவந்து தையலரேநானொருத்தி
குளிக்கவேவென்னீருங் கொப்பனவேவைக்கவேணும்
மாமிநாத்திப்புடவையோடுமங்கையரேயின்னமுங்கேள்
மாமன்புருஷனோடு மற்றுமுள்ளோர்வேட்டிகளை
கட்டியேமூட்டையாகக் கணத்தருகேகொண்டுசென்று
தூய்யவேயவைகளையும் தோய்த்துவரவேணும்
இப்படிக்கெல்லாம்நான் யெல்லாவேலையுஞ்செய்து
அலுத்தவருத்தத்தோடு அசைந்துசற்றும்நில்லாமல்
செய்துமேவந்தாலும் சொல்வதுகேள்சகோதரியே
கட்டினவீட்டிற்குக் கல்வியதுசொல்வதுபோல்
அதுசொத்தைசொள்ளையென்று பதட்டியேமாமிவந்து
பேச்சுகுறபேச்சுக்குப் பதில்களுஞ்சொல்லவேணும்
மடிபிடித்துயிழுக்கவரும் மாமியோடுநாத்தியுடன்
சண்டைக்குநிற்போருடன் சண்டைக்குநிற்கவேண்டும்
என்னநான்செய்தாலு மியம்பக்கேள்சகோதரியே
என்னசெய்தாளென்று என்மேல்சண்டைக்குநிற்பாள்
போதாகுறைச்சலுக்குப் புகலக்கேள்சகோதரியே
புருஷனிடமுஞ்சொல்லிப் பூசைவாங்கித்தருவாள்
மாமனார்மச்சினமார் மற்றுமுண்டானவரும்
வாயில்வந்தபடியாய் வைவார்களென்னையுமே
சரீரதூஷணித்துச் சண்டைக்கும்நிற்பதுண்டு

இப்படிக்கெல்லாபாடு மிருந்துஉழைப்பவட்கும்
வயிறாரவுண்ணவுந்தான் வாகாயுடுத்தவுந்தான்.
கிடைப்பதுமில்லையோடி கேளுஞ்சகோதரியே
நானுமேசாப்பிடவும் நங்கையரேவந்தாக்கால்
மாமியார்சாதம்போட மாவிரவாய்வந்திடுவாள்
அறைவயற்குமேல்போட அவட்குமனம்வாராது
நல்லதோர்சேலைதன்னை நான்கட்டபாற்கமாட்டாள்
தலையிலெண்ணை தடவ தானுப்பொருக்கமாட்டாள்
தலைவாரிகொண்டையிலே தான்புஷ்பஞ்சூடவிடாள்
நகைகளைபோடவிடாள் நாணயங்கள்செய்யவிடாள்
இவளுடையபொருமைக்கு யியம்பக்கேள் சகோதரியே
மாமியாரைக்காணாமல் மறைவாகயாவதுநான்
எண்ணெய்தடவிதலை சீவவேகண்டுவிட்டால்
என்னடி நீயென்ன தேவடியாளோசொல்
மேனியெல்லாமிப்போ மினுக்குகள் பண்ணுறாயே
என்றுமேவைதுகொண்டு யென்குடல்நடுங்கும்படி
காலனைப்போல்கடுகடுத்து கருவியோடிவருவாள்
இதுமாத்திரமென்று யெண்ணாதே சகோதரியே
சார்ந்துநான்புருஷனோடு சந்தோஷமாய்பேசகண்டால்
அவளுக்குமேமனது யாறச்சகியாது
என்புருஷன்யென்மீதில் யிருக்கபட்சமாகக்கண்டால்
அப்போதவள்சொல்லும் அகடுகேள்சகோதரியே
தேவடியாள்முண்டையிவள் திருட்டுக்கள்ளி என்னமோ
மாப்பிளைக்குமருந்திட்டு மயக்கிவிட்டாளென்றுசொல்லி
சண்டைக்குத்துடங்குவாள் சதிகாரியென்மாமி
இன்னமுமப்பாவி யியம்பக்கேள்சகோதரியே
இல்லாதும்பொல்லாது மென்மீதுகோள்கள்சொல்லி
அபராதமேற்றியல்லோ அஞ்சாமல்பாதகியும்
புருஷனையுமெந்தனுக்குப் பகையாக்கி வைத்திடுவாள்
இப்படிக்காகவல்லோ யென்மாமிவீட்டிலேநான்
படாதபாடுகள்தான் பட்டுவருகின்றேனே
என்றெல்லோபத்மாவதி யெடுத்துமிகக்கூற
கேட்டுமரகதவல்லிக் கன்னிதுயரமுற்று
பத்மாவதியைநோக்கி பாவையருமப்பொழுது
தன்னுடையதுயரதனை தான்கேளுமக்காவென்று
வண்ணமுடன்வாய்திறந்து வாகாயுறைக்கலுற்றாள்.



## மயிலாப்பூர்மரகதவல்லியின் துயரத்தை பத்மாவதியுடன் சொல்லல்.

அன்புள்ள அக்காயென் அருந்துயரை நீகேளும்
என்னுடையகுறையதனை யுன்னிடத்திற்சொல்லாமல்
பின்னே நான்யாரிடத்திற் புகலுவேன் தங்கையரே
நல்லநகரத்தில் நாயகமேநான்பிறந்து
நாட்டுப்புறத்திலென்னை கட்டிக்கொடுத்தபின்பு
பட்டிகாடுதன்னிலே பாவிநான்வாழவந்து
நான்படுங்கஷ்டங்களை நவிலமுடியாது
சொல்லிமுடியாது சகிக்கவும்போகாது
எழிதிமுடியாது ஏட்டிலடங்காது
என்னுடையகஷ்டங்களை யாரறிவார்வையகத்தில்
தெய்வமறியுமல்லால் தேசத்திலாரறிவார்
வெடியநாலுமணிக்கு விழித்துநானெழுந்திருந்து
அந்தயிருட்டிலேயே யக்காநான்சொல்லகேளும் [து
மாட்டுகொட்ட கைக்குச்சென்று சாணமுங்கொண்டுவந்
தெருமுதல்வீடுவரை சுத்திகள்செய்வதற்குள்
பொழுதுவிடிந்துவிடும் பொற்கதிரோனுதையமாவான்
கங்குல்விடிந்துவிடும் கதிரோனுதையமாவான்
அதின்பிறகுகேளுமக்கா அறிவையென்வேலைகளை
வீட்டினிலுள்ளதொரு வேணதோர்பாத்திரத்தை

சுத்தப்படுத்தவேண்டும் சாமான் துலக்கவேண்டும்
வீட்டிலுள்ளவேலையாவும் வடிவாய்முடிவதற்குள்
நல்லமணிஒன்பது நாயகியேயாகிவிடும்
அதற்குமேல்கேளுமம்மா அக்கையரேயென்கஷ்டம்
கழனிக்குப்போயிருக்கும் கணவர்க்குக்கேளுமம்மா
கஞ்சி,நான்கொண்டுமல்லோ கடுகெனவேபோகவேணும்
அதோடுவிட்டுதோதான் அக்காயென்தலையின்விதி
கணவனுடனே,நான் களைகள்பரிக்கவேண்டும்
நாற்றுப்பிடுங்கவேண்டும் நட்டுத்துலக்கவேண்டும்
அதற்குள்ளே நல்லமணி யாகும்பனிரண்டும்
அதற்குப்பின்வீட்டைவந்து அக்காநீகேளுமம்மா
கஞ்சிக்குடித்துவிட்டு கடுகெனவேகேளுமக்கா
வேண்டியகேழ்வரகை விரைவிலறைக்கவேண்டும்
அறைத்தவுடனேயு மக்காவே நீகேளும்
சாப்பாட்டுக்கானநெல்லை சடிதியிலே,நானெடுத்து
கொய்பலறவுமல்லோ குத்திகொழிக்கவேண்டும்
தாத்திப்புடைத்துமதை தான்முடிவுசெய்வதற்குள்
என்னுடையஜீவனது யெமலோகம்யெட்டிடுமே
அன்னேரவேளைக்கெல்லோ ஐந்துமணியாகிவிடும் [ன்
அதற்குமேல்சமையல்வேலை ஆறம்பித்துகொள்வதுட
காட்டுக்குப்போயிருக்குங் கணவரோடு மைத்துனர்க்கும்
குளிக்கவென்னீர்வைத்து கொப்பெனவே தருகவேணும்
நாட்டுப்புரத்திலென்ன நாயகியேகுழாவுமுண்டோ
கிணத்திலேசேந்தியல்லோ கன்னியே துலக்கவேண்டும்
என்சொல்வேனக்காவே இத்தண்ணீர்சேந்தும்போது
கையிரண்டுமிற்றெலவோ கபகபென்றுதானெரியும்
கஷ்டத்தையாரரிவார் கடவுளறியவேண்டும்
தண்ணீரைமொண்டுவிட்டு தானலுத்து வருவதற்குள்
வண்ணனுடன்பண்ணக்காரன் வந்துவிடுவார்கள்
அவர்களுக்குத்தகுந்தபடி அன்னமிடவேண்டும்
மாமனார்மாமியற்கும் மைத்துனர்க்கும்,நாத்திகட்கும்
இன்னமுள்ளப்பேர்களுக்கும் அன்னமிடவேண்டும்
சாப்பிடும்வரையவற்கு சார்பாராய்செய்யவேண்டும்
வீட்டுவிவகாரம் ஒழிந்தெல்லோ தான்முடிய
இரவுமணியதுவும் யெட்டுமேதானாகும்
அதற்குமேலக்கையரே யானுஞ்சாப்பிட்டுவிட்டு
அப்பவேமறுபடியும் அன்னேரவேளையிலே

சமைத்ததோர்பாண்டமதை சகலமுந்தானெடுத்து
ஒரண்டேயிருத்தெலவோ சுத்திகள் செய்யவேண்டும்
இப்படிக்காகவல்லோ யென் துயரங்கேளுமக்கா
காலையிலெழுந்திருந்து காணயிறவுமல்லோ
பத்துமணிவரையில் பகரவேகேளுமக்கா
மாட்டைப்போலுழைத்தாலும் மாமிநாத்திகளண்டை
நாயகமேயெந்தனுக்கு நல்லபேர்கிடையாது
இவ்வளவுதானோஅக்கா இன்னங்கேளென்கெதியை
என்கெதியைச்சொன்னால் ஏட்டிலடங்குமோதான்
பொழுதுவிடியுமக்கா பொற்கோழிகூவுமம்மா
கங்குல்விடியுமக்கா கதிரோன்மேற்காகுமம்மா
பிறர்கேட்டால்நகைப்பாரே பெண்ணின் கொடுமைதனை
அக்கம்பக்கங்கேட்டா லேயோசிரிப்பாறே
வேலையின்கஷ்டமக்கா யிருந்தாலொருபுறமும்
மாமியும்நாத்தியாலே நான்படுந்துன்பங்களை
சொல்லிமுடியாதுச் சுருக்கவுமாகாது
ஆகினும்சூட்சமாக அதைசொல்லிமுடிப்பேனக்கா
சித்தமுடன்செவிகொடுத்து சற்றேநீகேளுமக்கா
எனக்கிருக்குஞ்சத்ராதி என்னுடையமாமியோதான்
நல்லத்துணிகளுமே நானுடுத்தப்பார்க்கமாட்டாள்
ஒருவேலைசெய்யும்போதே யின்னொருவேலையிடுவாள்
செய்யவில்லையென்றெலவோ சீரியவளேதுரைப்பாள்
தடிசிறுக்கியென்றும் தட்டுவாணிசிறுக்கியென்றும்
வாயில்வந்தபடியாய் வைவதுந்தான்தவிர
நாத்தினியானதொரு கூத்தனும்பாவியவள்
என்மீதில்தானுமல்லோ யேதேனுங்கோளெடுத்து
ஆத்தாளிடத்தினிலே யவளுமேகுத்திவிட்டால்
அதைகேட்டுயென்மாமி அரும்பாவியோடிவந்து
திடீர்திடீரென்று தானதிரவோடிவந்து
மயிரைப்பிடித்திழுத்து மாபாவிகீழேபோட்டு
கையிலகப்பட்டதைக் காதகித்தானெடுத்து
கண்டபடிக்குயென்னை யடிப்பதுமல்லாமல்
ஆகட்டுந்தேவடியாள் உன்மாப்பிள்ளைதான்வரட்டும்
உன்னுடையமதத்தை அடக்கச்சொல்குரேனென்று
சபதங்கள்செய்துயென்மேல் சதிகாரிமாமியவள்
பிள்ளைவந்தவுடனே பெரும்பூதம்போலெழுந்து
அதட்டியடேபையா நீ வாடாவென்றேயழைத்து

கொடுஞ்சூலிமாமியவள் கூறுவதைகேளுமக்கா.
என்னடாவுன்பெண்டுக்கு யேருதுபேச்சுமிப்போ
மொட்டைச்சிரிக்குக்கு நீமுகங்கொடுத்திருப்பதினல்
அவளுக்குந்திமிருகொண்டு அடங்காதமதமேறி
குடித்தினத்தைப்பாழாக்கி கொண்டெல்லோ தானும்வா
ஏறுவுழுகிறவன் யிளைத்தேயிருப்பானுகில் [ருள்
எறுதுமச்சினங்கொள்ளு மென்றுவுரைப்பதுபோல்
உன்னுடையபெண்டாட்டி யுன்னுறுதியாலல்லவோ
அந்தச்சிறுக்கியென்னை யணுவுமதியாமல்
ஏடாகுடமாக யெடுத்தெரிந்துபேசுகுருள்
என்றுப்பலவிதமா யியம்பிப்புலம்பிடுவாள்
அதைகேட்டுஅந்தபாவி ஆக்கிரமித்துவோடிவந்து
நியாயமனியாய மொன்றையுங்கேளாமல்
தாத்துக்கோல்தனையெடுத்து துரத்தியெனையடிப்பார்.
தாத்துக்கோலடியக்கா தாங்கமுடியாமல்
தாய்வீடுவந்தெலவோ தான்சேர்ந்தேனிப்பொழுது
பூமியில்பெண்ணாய்நான் பிறந்ததும் போதும்போதும்
என்றுமரகதவல்லி எடுத்துரைத்தாள் தன்குறையை.

---



## சென்வணமீனாள் தன் துயரத்தைத் தன் தோழியுடன் சொல்லல்.

இஷ்டப்பிரியமுள்ள யெழிலானத்தோழியரே
என்னுடத்துயரமதை யியம்புவேன்கேட்டிடுவாய்
பட்டணத்தில்நான்பிறந்து பட்டிகாட்டில்வாக்குபட்
வாழ்க்கைபட்டபிற்பாடு வஞ்சியரே நீகேளு [டேன்
நான்படுந்துயரமதை நானிலத்திலாரறிவார்
ஆண்டவன்தானலவோ அறியவேண்டுமென் துயரை
மற்றவரறிவாரோ மங்கையரேயென்தோழி
என்க்கிடும்வேலைகளை யியம்புவேன்கேட்டிடுவாய்
காலையில்நானெழுந்து கங்குலிருட்டிலையே
வீட்டிலுள்ளவேலைகளை வேணதும்முடித்துவிட்டு
அதற்குமேல்கேளடியே அறிவுள்ளதோழியரே
சமையல்வேலைகளெல்லாம் சட்டாய்முடிப்பதற்குள்
மத்தியிலேசற்றுநேரம் மசந்துமேநின்றாக்கால்
மாமியாரோடிவந்து மாபாவிசொல்வதைக்கேள்
என்னடிதடிசிறுக்கி ஒதிமரம்போல்நிற்குறாய்
வேலைசெய்து அலுத்து விடாய்தீர்க்குராயோவென்பாள்
இஃதுயென்னயிழவுயென்று எண்ணியேயென்தோழி
அடுப்பண்டையேகுந்தி அறியதோர்சமையல்வேலை
பார்த்துமிருந்தாலும் படுபாவிசொல்வதைக்கேள்

அடியேமூதேவிமூண்டம் என்னடியென்னேரமும்
அடுப்புக்குநோகுதென்று மிடுப்புப்பிடிக்குருயோ
என்னடிதடிசிறுக்கி யெழுந்திருசீச்சீயென்பாள்
இதுயென்னவம்புயென்று யெண்ணியே யீன்மதித்து
வேறொருவேலையைநான் வேண்டியேசெய்தாலும்
ஓரகத்தியோடிவந்து யுதாசினங்களாகவப்போ
என்னடிப்பெண்ணே நீ யேடாகுடங்களாக
செய்கின்றவேலைவிட்டு சிறைக்குறவேலைக்குப் போனுய்
என்றவள்தான்பேசு மித்துக்கமதுவோர்பக்கம்
இருக்கவேயெந்தனுக்கு யியம்பக்கேள்தோழியரே
வேலைகள்யாவுமேதான் வடிவாய்முடிந்தபின்பு
சும்மாயிருப்பதோடு சொல்லக்கேள்தோழியரே
கல்வியிலாவதுவே கவனத்தைவைப்போமென்று
பெட்புடன்மனதிலெண்ணி புஸ்தகத்தையெடுத்தாலோ
அதைகண்டயென்மாமி அறைகுவதை கேள்தோழி
ஆமாண்டி நீபடித்து அறியவேபூசுபண்ணி
ஆபீசுக்குப்போயி ரூபீசுவாங்கியல்லோ
சோபியில்போட்டுக்கொண்டு தான்வரப்போகுருயோ
சீச்சீயெறிந்துவிட்டு வேலையைப்பாரடியென்பாள்
கேட்டெல்லோயென்மனது கலங்கியேகேள்தோழி
எடுத்ததோர்புஸ்தகத்தை யெறிந்துவிட்டுமேகேளும்
உடம்புகுளிப்போமென்று உத்தேசித்துப்போனுலோ
அதுகண்டுமோமியவள் அறைவதைகேள்தோழி
போதண்டிபோதுமடி பேய்சிறுக்கிமூண்டகமே
ஏருழுகிறபிள்ளை யிளைத்துப்போனுல்போகட்டும்
பரிசம்போகிறபெண்ணை பார்த்துவாயென்பதுபோல்
உழைக்கப்போனபிள்ளைக்குஒருகுடுவைதண்ணீர்காணேம்
உனக்கென்னடிசிறுக்கி மேனிமினுக்குமென்று
நெடநெடவென்றெலவோ நெட்டாகதான் பேசுவாள்
அந்ததுக்கத்தைக்கேட்டு அறையக்கேள்தோழியரே
எடுத்துப்போனதண்ணீரை எடுத்துயெறிந்துவிட்டு
முகத்தைக்கழுவியானும் பொட்டிடலாமென்ருலோ
கண்டெல்லோமாமிசொல்லுங் காதகத்தை கேள்தோழி
சரிதாண்டிசரிதாண்டி சாடைசரிதாண்டி
பட்டணத்துத்தட்டுனக்குபொட்டுதான்குறைவுஎன்பாள்
தலையேனும்வாரலா மென்றெல்லோபார்த்தாலோ
அதற்கவள்சொல்லுகின்ற அகடுகளைகேள்தோழி

கூந்தலிழுகிப்படி யெழுந்துவேலைப்பாருமென்பாள்
இந்த துக்கங்களான யாவையும்பொருத்துக்கொண்டு
துணியாகிலுமெடுத்துத் தோய்க்கவேபோனாலோ
அதைக்கண்டுஎன்மாமி அவள்வாய் புழுக்கசொல்வாள்
அடியேதடிசிறுக்கி யாமண்டிபோதுமடி
சல்லாபாவாடைகட்டி உல்லாசங்கொள்ளவிப்போ
உத்தேசஞ்செய்குருயோ ஓதடிமூளியென்பாள்
கண்டெல்லோயிக்கொடுமை கடைசியில்கேள்தோழி
இதுவென்னயெழவுமே இங்கிருந்தால் வம்பேயென்று
எண்ணிநினைத்தெலவோ யெதிர்வீட்டில்தான்வாழும்
வேதவள்ளியினிடம் விளம்பக்கேள்தோழியரே
போயாவதுகாலத்தை போக்கலாமென்றுசென்றால்
அங்கையுமாமியவ ளதட்டியேயோடிவந்து
பங்கப்படப்பேசும் பாவத்தைகேள்தோழி
இருக்கும்வேலைகளெல்லா மிருக்கட்டுமென்றுசொல்லி
இங்கேயெவண்டியுன்னை யிப்போதழைத்தா னென்பாள்
இந்தக்கிழவிக்குமே யியம்பக்கேள்தோழியரே
ஒருவரும்நாயஞ்சொல்ல வருவதுமில்லையடி
தப்பியாராவதொன்று தான்சொல்லிவிட்டாலோ
அப்போதவள்வாயை அகலத்திறந்துமல்லோ
செப்புவதைச்சொல்வேன் சீராகக்கேள்தோழி

## மாமியாராகிய கிழவி

## தான்வாழ்ந்ததைக்கூறல்.



போங்களடிப்போங்களடி பேசும்சித்திராங்கிகளே
எங்களிடகாலத்தி லியம்பிடக்கேளுங்கடி
இப்படிக்கெல்லாம்நாங்கள் யெதிர்த்துநடந்தோமா
நான்வாழும்போதெலவோ நங்கையரேகேளுங்கடி
ஓரகத்திகளென்ன ஓதநாத்திமார்களென்ன
மாமிமாமனாரென்ன மச்சினர்மூத்தார்களென்ன [ன்
இவ்வளவுஜெனக்கட்டி லிருந்தெல்லோநான்வாழ்ந்தே
ஐந்துபிள்ளைபெறும்வரையில் ஆளநிடம்பேசியறியேன்
தலைச்சன்பிள்ளையோடுதள்ளினேன்கொண்டையைநான்
இடைச்சன்பிள்ளைதனக்கு யிரவிக்கையுந்தள்ளிவிட்டே
மூன்றுவதுப்பிள்ளைக்குமோதிரமுந்தள்ளிவிட்டேன்[ன்

இப்படிக்கெல்லாம் நான் யிருந்துக்கொண்டிஞல்தான்
ஒத்தாள்வோரகத்தியுமா ஒத்துமேதான்வாழ்ந்தோம்
இக்காலச்சிருக்கிச்செய்கை ஏதென்றுஎடுத்துரைப்பேன்
ஐஞ்சுபிள்ளைபெற்றுலும் ஐஞ்சாமல் தானுமோடி
அன்னக்கொண்டைகள்வெகு அழகாகப்போடுவதும்
மஜிலிங்கிப்பாவாடை மாருமல்கட்டுவதும்
பார்க்கவேநெற்றிபொட்டு பகட்டாகயிடுகுவதும்
தினுசுக்கொருரவிக்கை சீட்டிகளில்வாங்கிதைத்து
எழிலாகபோட்டுமேதான் யிருக்கியேகட்டுவதும்
ஆறிருந்தப்போதினும் அச்சம்பயமில்லாமல்
ஆம்படையாநண்டை அடுத்துக்குலாவுவதும்
பெரியோர்சிரியோரென்று பார்த்துமதியாததுவும்
இந்தசிங்கிநாதங்களை யெங்கள்காலமறியோம்
கொண்டவன்சரியாகக் கொண்டு இருப்பினுக்கால்
சிறுக்கிகள்தன்பாடுத் திண்டாட்டமாய்முடியும்
இந்தநடக்கையெல்லாம் யேற்குமோ குலபெண்கட்கு
வம்மிசப்பெண்களுக்கு வடுக்குமோ அழகாமோ
என்றும்பலவிதமா யியம்பியேகிழவியரும்
பதங்களாகப்பாடி பாரதமுமுடிப்பாள்
கேட்டையாயென்தோழி கிழவியுடவாய்பேச்சை
இந்தக்கிழவியுட யிமிசையாம்ரோதனைக்கே
நாகரீகங்களையும் நானுமே நீக்கிவிட்டு
தலையொருவேஷமுமாய்த் துணியொருவேஷமாக
இருக்கின்றேனிக்கெதியில் இன்னங்கேளென்தோழி
மாமியாரிடத்தில்படும் மாகஷ்டமானதெல்லாம்
ஒருபக்கமிருந்தாலும் ஓதக்கேள்தோழியரே
ஆம்படையான்தன்னுலே யான்படுந்துன்பமதை
சகிக்கவுமாகுமோதான் சாற்றமுடியுமோதான்
சொல்லிமுடியுமோதான் சுந்தரியே யென்தோழி
அடியம்மாயதையுங்கொஞ்ச மறைகுவேன்கேட்டிடுவாய்
அகடுமாமிசெய்கொடுமைஆளனிடம்சொல்லப்போனுல்
அப்போதவர்சொல்லும் அதிசயங்கேள்தோழி
டியாம்நான்சன்ஸ்யென்று தானவருமேதோசொல்லி

அதையெல்லாமென்காதிற் போடவேண்டா மென்கிறார்
இவருடத்தொந்திரவோ யியம்புவேன் கேள்தோழி
அடியேதடிப்பெண்ணே அறிவுகெட்ட மாடேகேள்
விடியகாலமெழுந்து விளங்கவே நீயுமுந்தி
முகத்தையுஞ்சுத்திசெய்து மெல்லியரே பொட்டுமிட்டு
பின்புமற்றவேலைகளை போய்செய்யக்கூடாதா
எப்போதுபார்த்தாலும் யென்னடியுன்முகந்தான்
பாடையாயிருக்கிறதே பரச்சியிலுங்கேடாக
வீட்டிலுள்ளவேலைதீர்ந்து ஒழிந்ததோர்வேளையிலே
நால்வருடத்தேவாரம் நவிலுமுதலாகயின்னம்
அரியநூற்களைத்தேடி யன்பாய்பார்க்கொண்ணுதா
சூத்தயென்னவரவரநீ சோம்பேறியாகிவிட்டாய்
தேகத்தைசுத்திசெய்து துணிகளையுந்தான்தோய்த்து
கட்டக்கூடவுனக்குங் கற்றுக்கொடுக்கணுமா
இதற்குக்கூடவாபிறர் சொல்லிகொடுக்கவேண்டும்
என்றெல்லோயென்புருஷ னியம்புவார்கோபத்துடன்
அச்சமயத்திலேனும் யானுங்கேள்தோழியரே
குடும்பத்தின்துக்கத்தைக் கூறலாமென்றுபோனல்
அப்போதுஎன்புருஷ னதட்டியென்னையேதுரைப்பார்
என்னடிடெவில்நீ கண்டபடிபினத்துகிறாய்
போதுமடிவாயைமூடி போடியப்பாலேயென்பார்
இப்படிக்குத்தானுமல்லோ யேந்திழையே தோழியரே
மாமியார்வீட்டினிலே மாகஷ்டம் பட்டுவாரேன்
கேட்டாயோதோழிஎன்று கீர்த்தியுள்ளசென்னைமீனாள்
தன்னுடையதுயரங்கள் தானுரைத்து மேமுடித்தாள்.







# கிருஷ்ணம்மாள் தன் துயரத்தை அக்கமாருடன் தங்கைமாருடன் கூறல்.



அக்கமாரேதங்கைமாரே அன்புள்ள நேசிகளே
மாமியெனைபடுத்தும் மருந்துயரை யென்ன்சொல்வேன்
வாழவந்தயென்கொடுமை வரைகுவேன்கேட்டிடுவீர்
நாட்டினில்நான்யேன்தான் பெண்ணுய்ப்பிறந்தேனே
அத்தைவீடுயென்றலவோ ஆசையாகநானிருந்தேன்
அவளென்னையிப்பொழுது அக்காமாரே தங்கைமாரே
சொத்தைபாக்குவெற்றிலைக்குஞ் சுகமில்லாசெய்குருளே
பாட்டிபாட்டி என்றலவோ மேட்டிமைநான் கொண்டே
அந்தபாட்டிமாமியிப்போ வாட்டி வதக்கிருளே [னே
அப்பன்கூடப்பிறந்தா ளென்றுமேநானிருந்தேன்
தந்தைகூடதான்பிறந்தசொந்த அத்தைஎன்றிருந்தேன்
இப்படியாய்நானிருக்க யென்னையிந்த பாதகியும்
தப்பாய்நடத்திவந்தால் தையல்நான்யென்னசெய்வேன்
ஆறிடத்தில்யான்சென்று ஐயோமுறையிடுவேன்
இதுவென்னயவதியோதான் யியம்புங்களக்கமாரே
ஆணுய்ப்பிறந்தாலே ஆகும்அருமையென்றும்
பெண்ணுய்ப்பிறந்தாலே பிழையாமெருமை யென்றும்
அவளுமேயென்னேரம் ஆட்டிப் படைக்குருளே,

தன்மகளைப்பெற்றதுபோல் என்னைஎன் தாய் பிறவிலையா
என்னையுமென் தாயார் யெழிலாகத்தவமிருந்து
பெற்றஅருமையென்ன பேரிட்டநேத்தியென்ன
வளர்த்தவயணமென்ன வாழ்வளித்தகீர்த்தியென்ன
நா நிருந்ததற்கும்வளர்ந்ததற்கும் ஏந்திழைஅக்கமாரே
இந்தபெரும்புலிகையில் எனைபிடித்துகொடுத்துவிட்டா
நான்-பாடுகள்பட்டறியேன் பட்டினியிருந்தறியேன் [ர்
அடிமைவேலைசெய்தறியேன் அவமானம்பட்டறியேன்
எனக்கு-சங்கடத்தாலிகட்டி சஞ்சலத்தில் விட்டார்களே
நிழலுமே நிற்பதற்கு நல்லதாயிருந்தாலும்
0 மூசுடுபொல்லாதாக யிருப்பதுபோலவேதான்
என்தருமதுரையவரும் நல்லவராயிருந்தாலும்
என்மாமிபாவிவனக் கண்ணியாயிருக்கிருளே
என்கணவனேடெலவோ யானின்றுபேசிருந்தால்
வந்துவிடுங்கிழவிக்கு வயற்றெறிச்சலுமெத்த
படுக்கையிலேபேசினுக்கால் தலையணைமந்திரமென்ருள்
என்னமாயவளுக்கதீ யிருக்குமோவறியேனம்மா
எப்போதுபார்த்தாலும் யென்மீதெரிந்துவாருள்
என்னயிவள்கணவனையும் யிழுத்துமேகொண்டதுநான்
அல்லதுயிவள்பிள்ளையைத் தலையைத்திருகினது
மகளோடுநானுமென்ன மல்லுக்கொடுத்ததுவும்
புருஷன்சம்பாதனைக்கு பாத்திரியாய்நானிருக்க
என்னையெந்தவிதத்தும் ஏறவிடாபுறங்கழித்து
விட்டுயிவள்நடுவில் வந்துவிழுகுருளே
சட்டிப்பானைகழுவுவது சரியாகுதென்வேலை
சம்பாதனைவாங்குவது சரியவள்வேலையாம்
வீட்டைப்பெருக்குவது வெகுளியதுயென்வேலை
பணத்தைவைத்துயாளுவது பாவியவள்வேலையாம்
ஆக்கியறிப்பதுடன் எல்லாமேயென்வேலை
அளந்துபடிகட்டுவ்து அதிகாரமவள்வேலையாம்
அக்காளுன்படுஞ்சிறுமை ஐயையோபோதுமம்மா
மாமியாரிடத்திலே நான் மட்டிபட்டமும்பெற்றேன்
பட்டிஎனும்பெயரெல்லோ பரிவாகவாங்கிகொண்டேன்
தாசிஎன்றும்வேசிஎன்றும் தானுரைக்கபேரெடுத்தேன்

---

0 முசுடுயென்பது மரத்தடியிலூர்த்து வருபவர்களைக் கடித்துவிடுவ தால் சகிக்கக்கூடாத அவஸ்தையுண்டுபண்ணும் கட்டெறும்பைப்போன்ற ஓர் சேன்னிற எறும்பு.

தந்திரக்காரியென்று தானுமேபேசப்பெற்றேன்
மந்திரக்காரிபட்டம் மாறுமல் வாங்கப்பட்டேன்
அக்காமாரேதங்கைமாரே அனைவருங் கேட்டிடுங்கள்
இத்தனைநாள் நான்பட்ட யித்துயரம்போதுமம்மா [ம்
இனிநான்வாழ்ந்தவாழ்வு மித்தமட்டும்போதும்போது
மனம்நொந்துதாய்வீட்டிலே மங்கையேபோயிருந்தால்
இப்படிப்பட்டதொரு என்னுடைய அத்தையென்னும்
கொடுஞ்சூலிமாமியவள் கொடுமையாயென்மேலும்
திருட்டுபட்டமொருவேளை தான்கட்டி வைத்திடுவாள்
பார்த்தோர் நகையென்னை பழிகளைசொல்லிடுவாள்
கேட்டோர் நகைக்கயென்னை கெடிதிகள்செய்திடுவாள்
சொல்லாதசொல்லெல்லாஞ் சொல்லுவாள்படுபாவி
இல்லாதும்பொல்லாதும் ஏற்றியேபேசிடுவாள்
இத்தவுயிரைவைத்து யிருந்துவாழ்வதைவிட
குளங்குட்டையில்விழுந்து செத்தாலு நலமாமம்மா
என்றுகிருஷ்ணம்மாளு மெடுத்தெல்லோதன் துயரை
சொல்லிமுடித்தாளே சீராகக்கேட்டிடவே





## மதனசுந்தரி தன் துயரங்களை சிநேகிகளிடங்கூறுதல்.

என்னறுமைசிறுமைகளை யறிந்தசிநேகிகளே
என்னுடையத்துயரமதை ஏதென்று சொல்வேனம்மா
எனக்குமேவாய்த்திருக்கும் என்னுடையமாமியவள்

என்னைப்பட்டாதுபாடு படுத்துவதுமல்லாமல்
அண்டை அயல்வீடுசென்று அங்குள்ள பெண்களிடம்
என்மேல்பழிசுமத்தி யேடாக்கூடமாக
வெழ்க்கமானமில்லாமல் வாயில்வந்தபடியாய்
என்னையும்பற்றியல்லோ யென்னேர முறையிடுவாள்
அவள்சொல்லும்சங்கதியை அறியவே நானுரைப்பேன்
சற்றுங்கவனமதாய் சினேகிகளேகேட்டிடுங்கள்

## கிழவியாகியமாமியார்

## கூறுதலைச்சொல்லல்.

அலகைப்போலென்மாமி அடியம்மாசொல்வதைகேள்
எட்டுதெருகேழ்க்க எருமையைப்போல்தானிறைந்து
ஏன்மீதுகுற்றமதை யியற்றுவதைகேட்டிடுங்கள்
அடியம்மாயவளை நான் அறியாமல்கொண்டுவிட்டேன்
சம்பத்துக்காரருட சரிமகளெலாமிருக்க
இந்தசனியனைப்பேதைஏனோ,நான்கொண்டேனென்றும்
ஓடுகாலிசக்காளத்தி வீட்டில்வந்துசேர்ந்தவுடன்
என்னுடையசம்பத்துக ளெல்லாம்பறந்தோடுகுதே
எட்டாம்பிறப்பான யிந்தசக்களத்திவந்தும்
எட்டிபார்த்தயென்வீடு குட்டிச்சுவருகுறதே [டேன்
அறியாமலிவளை நான் அண்ணன்மகளென்றுகொண்
தெறியாமலிவளை நான் தமயன்மகளென்றுகொண்டேன்
வந்தவுடன்சிறுக்கிப் பந்தடித்தாளேயென்றும்
வரவரவுஞ்சிறுக்கி கழுதைமேய்க்குறாளென்றும்
என்றகதைபோலே யிவளுமேயானாளென்றும்
ஏறெடுத்துநோக்காத யெந்தன்மகன்தனையும்
என்னமோமந்திரங்க ளிவள்பண்ணிவிட்டாளென்றும்
அம்மாதினம்ராத்திரி அருமையென்மைந்தனுக்கு
தலையணைமந்திரங்கள் தானுமேயோதுறாளே
மந்திரமென்னமந்திரமோ மயக்கென்ன யவள்மயக்கோ
சொல்லுகின்றயவள்சொல்லும் சொக்குப்பொடிதானோ
அவள்வந்தப்பிறகெலவோ யருமையான யென்மகனும்
தாய்பிள்ளைஎன்றயன்பை தானறுத்துவிட்டாளென்றும்
அன்பானயென்மகனும் அம்மாவென்றுவாய்நிறம்ப
அழைக்கின்றதையுங்கூட அடக்கிவிட்டாளேயென்றும்
உருமையுள்ளஎன்மகனும் உத்தியோகத்திற்கேகி
உழைத்துவிட்டுத்தானும் ஒய்ந்துவரும்நேரமதில்

இவள்போய்யெதிரில் நின்று யிளித்துவிட்டவுட்னே
கொப்பெனவேயவனுக்கு குளிர்ந்தெல்லோபோகுறதே
வேணும்விளையுமென்று வெகுபாடுபட்டுதேடி
எனக்குமேயிப்பொழுதும் எதிரியேயானுளென்றும்
இவளைப்போலவும்நான் என்னுடையகாலமதில்
புருஷனோடுயெதிர்நின்று பேசியறியேனென்றும்
சேரப்பக்கத்தில்நின்று சிரித்து அறியேனென்றும்
ஏனென்றுகேட்டறியேன் யெடுத்துமுகம்பாரேன்
அடியம்மாயிக்காலத்து சிரிக்கிகளென்னமோதான்
சைகையாலுந்தங்களிட சாலக்குப்பேச்சியாலும்
பிரியத்தினுலுமல்லோ புருஷனைக்கேளுமம்மா
வாகாயிரண்டுநாள் வசியப்படுத்திக்கொண்டு
மாமியார்கண்பார்க்க மாமனுர்யெதிரேநிற்க
நாத்திமார்காதுகேழ்க்க நாணம்சற்றுமில்லாமல்
புருஷனுக்கெதிர்மோர்ஜா போட்டுமோகொண்டுநின்று
சல்லிசாய்சார்ந்துகொண்டு சருகானயிவளும்
என்னஒருகூச்சநாச்ச மெள்ளளவுந்தானுமென்ன
கொஞ்சங்கூடயில்லாமல் கொஞ்சுகுருளேயென்றும்
இத்தனையுஞ்சொல்லிமாமி யின்னமுஞ்சொல்வதைகேள்
அடியம்மாகேளுங்கடி யான்கொண்டமருகிகொள்ளை
இப்படிக்கிவளிஷ்டமா யெல்லாம்நடத்திவந்தால்
அதற்குநானேண்டியம்மாயிருக்கின்றதுவோசொல்லும்
மாமியாரைக்கேளாமல் மருமகளானவளும்
தலையைமுழுகலாமா தான்தலையைச்சீவலாமா
மஞ்சள்குளிக்கலாமா மைபொட்டுயிடலாமா
பூவும்முடிக்கலாமா புதுதுணியுங்கட்டலாமா
உடமைகளைதானெடுத்து உடலில்தரிக்கலாமா
ஆசைபட்டதரியப்பட்ட தவள்வாங்கிதின்னலாமா
அன்னியர்கள்தன்னையிவள் அழைத்துமே பேசலாமா
இவளுக்குஅண்ணனோடு என்னேறமென்னபேச்சு
தம்பியோடிவளுக்கென்ன தான்பேச்சுகேளுமம்மா
இதுயெங்கேயடுக்குமம்மா இதுவென்ன ஆச்சரியம்
அவளையுங்கட்டியல்லோ அறைகுவேன் கேளுமம்மா
இரண்டுமூன்றுவருட மின்னமுமாகவில்லை
இதற்குள்ளேயவளுமல்ல குதிர்போலிருந்துக்கொண்டு
இரண்டுஆண்பிள்ளைகளை யீன்றுளே நோகாமல்
பெற்றெடுத்துக்கொண்டாளே பார்த்திருக்கும்போதே

இனியிவளுக்குமென்ன யியம்புவேன்கேளுமென்றும்
அதிகாரமெல்லாமினி அவளுதேயாச்சுதென்றும்
என்னுடையமகளுக்கேதா னில்லையேஓராண்பிள்ளையும்
ஆண்பிள்ளைபெற்றதினுல் அவளுக்கே மிப்பொழுது
ஆணவமும்ஜாஸ்தியாய் ஆகிவிட்டதேயென்றும்
இதைஎல்லாம் பார்க்கப்பார்க்க என்வயிறெரியாதா
குடல்கள்குமுராதா கூவியவள்சொல்லுவதை
அறிந்தீராமாமிவார்த்தை அக்கைமாரே தங்கைமாரே
என்னுடையபாவத்தை யியம்பவுங்கேட்டீர்களா
இன்னமுமென்மாமி யியம்புவதைக்கேளீர்
ஆணைபெற்றும்பெரும்பாவி யாகிவிட்டேனேயென்றும்
என்றைக்குத்தொலைவாளோ என்குடிசெழிக்கவென்றும்
கையைகாட்டிகாட்டியவள் கருவிமுறுக்குகுருள்
அக்காமாரேதங்கை அறிந்தீர்களோயென்துயரம்
என்றுமதனசுந்தர மியம்பிமுடித்தாளே.







## குணபூஷிணிதன் துயரத்தை சகோதரிகளிடஞ்சொல்லல்.

அன்புப்பிறியமுள்ள ஆனசகோதரிமார்களே
என்னுடையத்துயரமதை யியம்புகுறேனிப்பொழுது
சற்றுகவனமதாய்ச் செவிகொடுத்து கேழ்ப்பீரம்மா
தங்கைகளே,தானுமொரு தனவான்தன்வீட்டினிலே

பெண்ணாகயான் பிறந்து பெருமையுடன் வளர்ந்து
தனவானுடவீட்டிலேயே தானுமே வாழ்க்கைப்பட்டேன்
பிறந்தது நான் புதுவை நகர் புகுந்தவிடம் பொன்னகரி
என்னுடைய தாயாரும் பிறந்த தின் பிற்பாடு
என்னுடைய தகப்பனாரும் யிதற்குமுன்னாகவே தான்
பதினாறுவருஷத்திற்குப் பார்க்கவே முன்னாக
இராணுவவகுப்பிலேயும் நலமாகப்பேரோங்கி
தாஷ்டீகமோடெலவோ தளகர்த்தராயிருந்த
என்னுடைய அத்தையவ ளீன்றமகனாற்கு
என்னையும் பாணிக்கிரணஞ் செய்துக்கொடுத்தார்கள்
எனக்குக்கலியாணம் யெழிலாகத்தானாகி
நானும் புருஷன் வீட்டில் நலமாகப்போனவுடன்
வெகுதூரதேசத்திலே வாழ்க்கைபட்டுதானிருந்த
என்னுடைய நாத்திநாரின் யெழிலான புருஷனுந்தான்
ஜீவன்பிறிந்தெலவோ சிவலோகஞ்சேர்ந்ததாக
சமாச்சாரங்களங்கே சதுராய்வந்தபடியால்
கேட்டெல்லோயெந்தன் மாமி கடுகனவேயப்பொழுதே
அந்த நல்லஊருக்கு அப்பொழுதேபோயிவிட்டாள்
அவளுந்திரும்பிவர ஆச்சுதுபத்துமாதம்
அந்தபத்துமாதகாலம் அறையக்கேள் தங்கையரே
நானும்யென் புருஷனுமா நன்றாகயிருந்துமல்லோ
திரேகமும்ஜீவனும் சேர்ந்திருப்பதைப்போலும்
கரும்பும்ரசமுமொன்றாய் கலந்திருப்பதைபோலும்
சதையோடுநகமதுவும் சார்ந்திருப்பதைபோலும்
அதிகப்பிரீதியோடு அன்பாகநாங்கள் வாழ்ந்தோம்
எங்களிடசந்தோஷம் யியம்பக்கேள் தங்கையரே
நீடித்திருந்தாலே நிகழ்த்துவேன் கேளுமம்மா
இந்தஉலகமதை யாங்கள் சதமென்றும்
எண்ணிவிடுவோமென்றோ அல்லதுவேறென்னமோதான்
எங்களுடசந்தோஷ மிருக்கப்போகாதேஎன்றும்
கண்டவராகுமந்தக் கடவுள் வர்மாற்றிவிட்டார்
எப்படியென்றாலோ யியம்புவேன் கேளுமம்மா
பரிவாகத்தானுமல்லோ பத்துமாதஞ்சென்றபின்பு
ஏகியிருந்ததொரு யென்னுடையமாமியரும்
அமங்கலியாப்போனதொரு அவளுடைய தன்மகளும்
வந்தெல்லோசேர்ந்தார்கள் வளமாகபத்தாமாதம்
அவர்களுமெங்களிட அன்பானகிரகமதில்

வந்துபிறவேசித்து வருங்கிரகசாரமோதான்
வந்துநுழைந்தபோது வாகாய்கேள் தங்கையரே
நானும்யென்பத்தாவும் நலமாகவப்பொழுது
அதிகநேசமோடு யானந்தமாகவேதான்
சரசங்கள்பேசியல்லோ சல்லாபித்தேயிருந்தோம்
அதைகண்டமாமிநாத்திக் கதிககோபங்கள் பொங்கி
அவர்களுமப்பொழுது அடவாயெங்களைபார்த்து
கரேமாகவேதான் கண்ணையுருட்டினதும்
ஆயிறங்கத்திவெட்டுக் காககச் சமமாகவும்
இருந்தது அப்பொழுது யென்சொல்வேன் தங்கையரே
அந்தவோர்பார்வையிலே அகப்பட்டுநாங்களுமே
பட்டுப்போகாமல்நாங்கள் பரிவாய்பிழைத்ததுவும்
ஆர்செய்தபுண்ணியமோ அறியோமேதங்கையரே
அவர்களைக்கண்டவுடன் அக்ஷணமே நானெழுந்து
அடிபணிந்துநமஸ்கரித்து அப்பாலேபோய்விட்டேன்
அப்போதுயென்மாமி அறைவதைக்கேளுமம்மா
என்னுடையபத்தாவை யெழிலாகத்தானோக்கி
அலகைபோல்வாய்திறந்து அவளுமேயே துரைப்பாள்
என்னடாயென்மகனே யியம்புவதை கேளடா நீ
நானுமுன்தகப்பனரை நலமாய் விவாகஞ்செய்து
இருபதாண்டுவரைக்கும் யிருந்தேன்மங்கிலியத்துடன்
மங்கிலியஸ்திரீயாக மகிட்சியுடன்நானிருந்தும்
அந்தயிருபதாண்டு ஆனதோர்காலமட்டும்
இரண்டொருவார்த்தைகூட என்னுடையகணவனுடன்
நானின்றுயெப்பொழுதும் நலமாய்பேசியறியேன்
புருஷன்வீட்டினில்வந்து புகுந்தடிவைத்தவுடன்
நாத்தினியாள்வந்த நங்கையருமேதுரைப்பாள்
புருஷனைதின்றுவிட்டுப் பேய்போலே நிற்கின்ற
என்னிடத்திலுந்தனுக்கு என்னபேச்சிருக்குதென்றாள்
அந்தமொழிகேட்டு அடவாகயென்புருஷன்
அடித்தவாய்துடைத்தாற்போ லவருமேஏதுகேழ்ப்பார்
நாத்தினார்தன்னுடைய நாயகனிறந்துபோனால்
என்னுடையபெண்சாதி என்செய்வாளதற்குமேதான்
பெண்சாதியோடுநான் பேசினேனேதவிர
அன்னியஸ்திரீயிடத்தில் யான்பேசவில்லையென்றார்
அந்தமொழிகேட்டு அலங்காரிமாமியவள்
சீரியேயப்பொழுது செப்பும்மொழிகேளும்

அந்தசிறுக்கியுட ஆவலினால்யிப்பேச்சா
கற்றுக்கொடுத்தாளோ காரியமாகவேதான்
என்றெல்லோஎன்மாமி என்சொல்வேன்தங்கையரே
குதித்தக்குதிப்புமவ ளாடினஆட்டமுந்தான்
சதுருக்குவிட்டதொரு தாசிகூடயாடமாட்டாள்
என்னுடையநாயகரு மானியவராதலினால்
ஊர்சிரிக்கப்போகுதென்று உற்று நினைந்தவரும்
பயந்துஒன்றும்பேசாம லிருந்துவிட்டா ரென்புருஷன்
அன்றுமுதல்பலநாளாய் அறையக்கேள் தங்கையரே
மாமிவாயும்நாத்திவாயும் மரத்தொருநா ளோயவில்லை
அன்றுமுதலென்மீது அடங்கலுமே சாதித்தும்
என்னுடையகோஷ்டத்தை யிவரடக்கவே ணுமென்று
தீர்மானித்திவர்களுமே திடீலென்றுவப்பொழுது
வேலைக்காரிகள்தம்மை விரட்டியே தள்ளிவிட்டு
சார்ந்ததோர்வீட்டிலுள்ள சகலவேலைகளையும்
நன்றாகவேதானும் நானேசெய்யும்படியாய்
எந்தன்தலைமேலே யேற்றிச்சுமத்தினார்கள்
இன்னங்கேள்தங்கையரே எந்தன் தலைவிதியை
என்னுடையபத்தாவிற்கு யானுமேகேளடியே
அன்னமும்நான்படைத்து அழகாகயின்னமுந்தான்
தாம்பூலமுங்கொடுத்து தங்கையரேமுதலியதோர்
வேலைமுதலானதும் விளங்கவேயானுமல்லோ
செய்குறதாயிருந்தால் செப்பக்கேள் தங்கையரே
என்னுடையகஷ்டத்தை எடுத்துமேசொல்வேனானல்
படுகுமென்கஷ்டத்திற்கோர் பரிகாரமாயிருக்கும்
என்னுடையபுருஷனுக்கு வுள்ளதோர்வேலையெல்லாம்
மாமியும்நாத்தினியும் மாறிமாறிசெய்துக்கொண்டு
ஓடிவோடிப்புருஷனுக்கு உபசரணையவர்கள்செய்து
கஷ்டமானவேலைகளை கன்னியரே சொல்லுவன்கேள்
எனக்கென்றுநேமித்து யென்பங்கா வைத்துவிட்டார்
ஆகினுமின்னமெந்தன் அருந்துயரைக்கேளுமம்மா
பொல்லாதயென்விதியைப் புகலுரேன் கேளுமம்மா
எல்லவரும்சாப்பிட்டு யெழுந்ததின்பிற்பாடு
இலையிலேவிட்டெழுந்த யெச்சைசாதத்திற்குநான்
காத்திருக்கவேணுமடி கனத்தபசியானாலும்
அல்லதுயென்கெதியை யறைகுவேன் கேளுமம்மா
எனக்குப்பசித்தபோது யான்பொசிக்கக்கூடாது

அந்தவெச்சிபன்னங்கூட அரைவயருகாண்பதில்லை
என்னுடையமாமிநாத்திஎந்திழையேசொல்லுரேன்கே
வந்தநாளிதுமுதலாய் வாகாகயானுமேதான் [ள்
என்னுடையப்புருஷனேடு யானின்றும்பேசுவது
குதிரைக்கொம்பாகியல்லோ கோதையரேவிட்டுதேடி
நானொருபக்கத்திலும் நாயகனோர்பக்கத்திலும்
இருப்பதேயல்லாமல் ஏந்திழையே சொல்லுவன்கேள்
ஒருவர்க்கொருவர்நாங்கள் பார்க்கவுங்கூடாமலும்
நயனபாஷைகள்கூட நவிலவிடமில்லாமலும்
போயியும்விட்டுதேடி பொற்கொடியேதங்கையரே
இயம்புவேனென்குறையை யின்னமுங்கேளுமம்மா
இராக்காலங்களிலேதான் என்னுடையபத்தாவின்
படுக்கையறைக்குள்ளேநான் பிரவேசிக்காதபடி
அந்தஅறைதனக்கு யமர்ந்தவாசற்படியின்
ஓரத்தில்தானுமல்லோ ஓதக்கேள்தங்கையரே
தாயும்மகளுமாகத் தழுவிப்படுத்துக்கொண்டு
ஒருவர்மாற்றியொருவரங்கே உற்றுவிழித்தெலவோ
பாராகொடுப்பதற்கு பாபிகள்தலைப்பட்டார்கள்
இன்னமுமென்குறையை யியம்புவேன்கேளுமம்மா
இவ்வளவுயிவர்கள்செய்யும் யேடாகுடத்திற்கெல்லாம்
இடமுங்கொடுத்துக்கொண்டு ஏந்திழையேஎன்கணவர்
உபேக்ஷையாயவர்தனக்கு யுள்ளத்திலிருப்பதுவும்
எனக்குமனவேதனையா யிருந்தாலுந் தங்கையரே
மானத்திற்கஞ்சியவர் மௌனமா யிருப்பதென்றும்
அவருக்குயென்மீதில் அன்புமிருக்குமென்றும்
எண்ணியேநானுமேந்திழையே சொல்லுவேன்கேள்
சகலமாகயென்மீதில் சார்ந்துவருகின்ற
கஷ்டநஷ்டங்களுடன் காணும்நிஷ்டூரமுற்றும்
பொருமையுடன்சகித்து பெண்ணேளும்நானிருந்தேன்
இப்படிக்காகவல்லோ ஏந்திழையே நானிருக்க
மாமியும்நாத்தினியும் மாபாவியானவர்கள்
வஞ்சநினைவுகொண்டு நெஞ்சில்கபடுவைத்து

என்னைகெடுக்கவென்று யெண்ணிமனதில்வைத்து
என்புருஷன்வீட்டினிலே யிருக்கும்வேளை பார்த்து
விபசாரிகளையுமே வேணதோர்பேர்களையும்
அடிக்கடிவீட்டிற்கு யடவாகவரவழைத்து
அவர்களுடன்நல்லவார்த்தை அன்பாகவேபேசி
என்னுடையபுருஷனுக்கு மேந்திழைமாரவர்களும்
சினேகத்தையுண்டுபண்ண சித்தமிகவுங்கொண்டு
சகலபிரயத்தனமும் சார்ந்துமேசெய்தார்கள்
என்னிடத்திலென்புருஷன் பேசக்கூடாதென்றும்
தள்ளியெனைவிலக்கித் தானந்தப்பாபியர்கள்
அன்னியஸ்திரீயோடெந்தன் ஆளனும் பேசும்படி
முயர்ச்சிகள்செய்துஎன்னை முழுதுங்கெடுக்கயென்னை
என்னுடையமாமிநாத்தி யேற்பாட்டை பார்த்தீர்களா
இப்படிக்கெல்லாமல்லோ எத்தனஞ்செய்தவர்கள்
எப்படிப்பட்டப்பொல்லா தவர்களாயிருக்கவேண்டும்
என்றுமே நீங்களுமே எண்ணியறிந்திடுங்கள்
தக்கப்பிரியமுள்ள தங்கைமாரேயின்னமுங்கேள்
என்னைப்படுத்துகின்ற யிக்கொடுமை யானதெல்லாம்
தூரதேசமதனிற் றுலங்கவேதானிருக்கும்
என்னுடையதகப்பனுர்க்கு ஏந்திழையேதங்கைமாரே
கடிதமூலமாகவே கண்டுநான்தெரியவித்தால்
உடனேயெனக்குமல்லோ உபகார மாகுமென்று
சொல்லுமொழியதனில் சந்தேக மொன்றுமில்லை
மாமிநாத்திசெய்வதற்குப் பரிகாரமாயிருக்கும்
ஆகிலுமின்னமுங்கேள் அறைகுவேன்தங்கையரே
என்னுடபாட்டனும் இரந்ததின்பிற்பாடு
என்தகப்பனுறெலவோ யிருந்துமுதன்மையாக
அவருடையதங்கையான அரக்கியென் மாமிதன்னை
மிக்கஉபசரித்து மேலாகத்தான்வளர்த்தும்
விளங்கவிவாகஞ்செய்துக் கொடுத்ததுந் தான்தவிர
அவளையுமவள்பிள்ளை யானயென் பத்தாவையும்
நெடுங்காலமாதரித்து நீடித்தப்படியாலும்

துஷ்டர்க்குக்கண்டருக துலங்குமென் தீகப்பனையும்
அவரையுங்கண்டாலே யறைகுவேன்கேள் தங்கையரே
கருடனைக்கண்டதொரு பாம்புப்போலாகவல்லோ
என்னுடையமாமியாரும் எனக்கெதிரிநாத்தினியும்
பெட்டியில்பாம்புபோலே பேசாதடங்கியல்லோ
இருப்பார்களென்பதுவும் மியம்பிட நிட்சயமே
ஆகிலுந்தங்கைமாரே யறியவே நீர்கேளும்
என்புருஷன்வீட்டினிலே யென்னை நடத்துகிற
கொடுமைகளானதெல்லாங் கொம்பனையே தங்கையரே
தாய்தகப்பன்மார்களுக்குத் தான்தெரிய வைப்பதுவும்
பதிவிரதை நம்பளுக்குத் தகுதியதுவல்லவென்றும்
கலகத்துக்காஸ்பதமாய்க் காரணமாகுமென்றும்
நினைத்துமேதானெலவோ நேரிழையே தங்கைமாரே
என்னுடையதகப்பனுக்கு மிச்செய்திதானறிய
கடிதங்களெழுதாமல் கன்னியரே யிருந்துவிட்டேன்
இப்படிக்குஎன்துயரை யானேசகித்துக்கொண்டு
என்னுடையபுருஷனிடம் எவ்வகையாகிலுந்தான்
தெரிவிக்கவேண்டுமென்று தீரமது நான்கொண்டு
நிலையாகயென்மனதில் நிட்சயித்துக்கொண்டெலவோ
ஒருநாள்கேள் தங்கையரே யுற்றநடுஜாமமதில்
துல்லவேயெல்லவரும் தூங்கியப்பிற்பாடு
நானுமெழுந்துசப்தம் நாயகமேசெய்யாமல்
என்னுடையபத்தாவி ருக்கும் விடிதியான
படுக்கையறைக்குநேரே பரிவாகயானுஞ்சென்று
அப்போது அங்குநேர்ந்த அவதியையென்னசொல்வேன்
ஆளன்படுத்திருக்கும் அவ்வறைவாயற்படியின்
ஓரத்தில்தானெலவோ ஓதக்கேள் தங்கையரே
மாமிநாத்தினியென்னும் மாபாவியிரண்டுபேரும்
காவக்காரிகளாகக் கார்த்துப்படுத்தார்கள்
சேவகர்கள்போலே சேர்ந்துபடுத்திருந்தார்
அடங்காரமாமிநாத்தி யவர்களுடக்காவலையும்
கடந்துஉள்ளேபோவதற்குக் கருதியே நானுமப்போ

யோசித்திருவன்ரயும் ஓர்தாண்டாய்தாண்டினேன்னுன்
அப்போதுஎன்காலும் அடவாகத்தான்தடிக்கி
அடியற்றமரம்போலே யவர்மேல்விழுந்துவிட்டேன்
அப்போதுதர்னெலவோ கேளுங்கள்தங்கைமாரே
இருட்டாயிருந்ததினுல் யென்னையவர்களுமே
கையால்தடவியல்லோ காதகிகள்தான்பார்த்து
நானென்றுத்தானுமல்லோ நன்ருகவேதெரிந்து
கண்டுபிடித்துக்கொண்டு கட்டாணிமாமிநாத்தி
அடிக்கவுமெத்தனையு மாரம்பஞ்செய்தார்கள்
பிடித்தப்பிடியவரும் யென்னைவிடாமலேதான்
அடித்தப்படியால்தான் அடிபொருக்கமாட்டாமல்
நகத்தாலவர்களையும் நானங்கேகீறையிலே
இதுதான்சாக்கென்றவர்கள் ஏந்திழையே தங்கைமாரே
தங்களுடநகங்களாலே தாங்களுமப்பொழுது
அதிகமாகக்கீரிக்கொண்டு அழுதவரு மேதுசொல்வரர்
கூகூவென்றெலவோ கூச்சலவர்தான்போட்டு
எங்களைவந்துமிப்போ கொல்லுராளென்றுகூவ
அப்போதுஎன்கணவர் அலறிவிழித்துக்கொண்டு
உடனேயவர்தானெழுந்து உத்தமருமப்பொழுது
தீபமுடன்யெங்களிடம் தீவிரமாயோடிவந்தார்
கள்ளனென்று அவர்மதித்து கடுகெனவேயோடிவந்து
திருடனென்று அவர்மதித்து திடீரென்று வோடிவந்து
எழிலாகத்தானும் என்னையும்பார்த்தேதுகேழ்ப்பார்
என்னடிப்பெண்ணே நீ யிந்தநடுஜாமத்திலே
உன்னுடையஅறையைவிட்டு யிங்குநீ யேனேவந்தாய்
என்றுயதட்டியல்லோ என்னையவர்கேழ்க்கையிலே
அப்போதுநானுமல்லோ அடவாய்கேள் தங்கையரே
உண்மையானகாரணத்தை யுத்தமருடனேசொல்ல
வெட்கங்கள்பட்டுக்கொண்டு வாய்திரக்கக்கூடாமல்
கள்ளப்புருஷன்வீட்டில் கன்னியும்தான்போயி
அகப்பட்டுக்கொண்டவள்போல் அதிகபயமுமுற்று
விள்ளமுடியாமல் விலத்துமிகவிழித்தேன்

அப்போது தானுமல்லோ அறையக்கேள் தங்கையரே
அடங்காரமாமி நாத்தி அடமாகவப்பொழுது
பழிகாரமாமி நாத்தி பாதகிகளப்பொழுது
இதுதான்சமையமென்று யிருவருமே துரைப்பார்
பார்த்தையாயுன்னுடைய பழிகாரப்பெண்சாதியும்
இந்தநல்லராத்திரியில் யிங்கேயவளும்வந்து
எங்களைச்செய்தகோலம் ஏதென்றுசொல்வோமப்பா
பார்த்தையாஎங்கள்காயம் பழிகாரியவள்செய்ததை
கண்டையாயெங்கள்காயம் கள்ளியவள் செய்தகொள்ளை
என்றுயென்மேல்பழிக ளிருவருந் தானுறைத்து
எந்தவிதத்திலேயும் என்னைகெடுக்க வெண்ணி
அப்போதிருவர்களும் அடமாகயே துரைப்பார்
எந்தனுக்குத்தானுமல்லோ ஏத்திழையே தங்கைமாரே
பேயாவது அலத்தூட் பயித்தியமாவதுதான்
பிடித்திருக்கவேணுமென்று பேசியே சாதித்தார்கள்
பழிகாரியவர்களுமே பசப்பின அம்மொழியை
நிசமென்று யென்கணவன் நிட்சயித்து அம்மொழியை
என்னையுமப்பொழுது என்கணவன் தானுமல்லோ
பிடறியில்கையைவைத்து பிடித்துதள்ளிகொண்டுபோயி
என்னுடைய அறைக்குள் என்னைவிட்டுகேளுமம்மா
கதவையிழுத்துசாற்றி கடுகெனவேயப்பொழுது
வெளிபக்கம்நாதாங்கி விரைவாகப் போட்டுவிட்டார்
கேட்டீரோயென்கெதியை கீர்த்தியுள்ள தங்கைமாரே
அறிந்தீர்களாயென்கெதியை அன்புள்ள தங்கைமாரே
புருஷனையான்பார்க்கப் போனதோர்கொள்ளையம்மா
கணவனை நான்பார்க்க கன்னிநான் போனகொள்ளை
இப்படிக்கெல்லவோதான் எனக்குசம்பவித்ததென்று
நினைத்துயந்தராமுழுதும் நானழுதக்கண்ணீரும்
அந்தஅறைமுழுதும் அம்மா நிறைந்ததுவே
இப்படிக்காகவல்லோ அன்றிறவு சென்றபின்பு
மறுநாள்விடிந்தவுடன் மங்கையரே சொல்லுவன்கேள்
வைத்தியரைத்தேடியல்லோ வாகாயழைத்துவந்தார்

மந்திரவாதிகளை மாவிரவாய்கூட்டிவந்தார்
எல்லவரும்வந்தெலவோ யேகமாய் கூடிவிட்டார்
அப்போதவர்கள்சொல்லுமதிசயத்தைஏதுசொல்வேன்
வைத்தியரானவரோ வழுத்துவதைக்கேளுமம்மா
எனக்குப்பயித்தியமும் ஏறிருக்குதென்றார்கள்
சங்கடம்நேருமென்று சாதித்துச் சொன்னார்கள்
மருந்தியவேணுமென்று மருமமுரைத்தார்கள்
அப்போதுமாந்திரீக ரவர்களுமேயேதுரைப்பார்
பொல்லாதபேயெனக்குப் பிடித்துயிருக்குதென்றும்
அல்லல்படுத்துமென்றும் அவகேடுநேருமென்றும்
வாயில்வந்தப்படியுளறி வாதித்துநின்றார்கள்
அவர்களிலேயொருவன் யறைகின்ற விந்தையைகேள்
எங்கெங்கேதானிருந்துயென்னையுந்தானுமல்லோ
நூற்றெட்டுப்பேயதுவும் நேராகத்தூன்பிடித்து
இருக்கின்றதென்றெலவோ யியம்பினனக்கெடுவான்
அப்போதுதங்கையரே அறையக்கேளெந்தனுக்கு
அம்மொழியைக்கேட்டவுட னங்கமெலாந் தான்பதரி
பாவியவன்சொல்லையிலே பாவாய்மனமுருகி
என்னையறியாமல் எனக்குமேயப்பொழுது
கோபம்பெருகியல்லோ கூருகநேர்ந்திடவே
அப்போதுதங்கையரே அங்கிருந்தஓர்கல்லை
எடுத்தெல்லோவப்பொழுது எறிந்தேனவன்மேலே
அப்போதனைவர்களும் அறைவதைக்கேளுமம்மா
என்னையும்பேய்பிடித்து யிருக்கின்றதென்பதற்கு
இதுவோதிஷ்டாந்திரங்கள் என்றவர்சாக்ஷிவைத்து
பிரதக்ஷமானருசு புருப்பாகிவிட்டதென்றும்
என்சொல்வேன்தங்கையரே எனக்குநேர்ந்தகெதியை
ஒன்றும்யோசியாமல் உடனே யெனைப்பிடித்து
கைவிலங்குக்கால்விலங்கு கழட்டாபெருவிலங்கு
போட்டெல்லோஎந்தனுக்குபொல்லாகொடுமைசெய்து
தலையைச்சிறைத்துமல்லோ தான்விட்டார்தங்கையரே
இப்படிமந்திரவாதி யிமிசையொருபக்கஞ்செய்ய

வைதியரொருபக்கம் வந்துதொந்திரவுசெய்ய
பண்டிதனும்மாந்திரியாம் பாவியிருவர்சேர்ந்து
ஒருவர்மாற்றியொருவரென்னை ஓதக்கேள் தங்கையரே
செய்தச்சித்திராக்கினை செப்பவுமெந்தனுக்கு
ஒருவாயும்போதுமோதான் உரைக்கயனைத்தையுமே
இப்படிக்கிவரிமிசை என்னையுஞ்செய்கையிலே
அப்போதவர்களையும் அறிவையரே யான்பார்த்து
என்னுருயிருக்குமே இத்தனையெமன்வேண்டுமோ
ஏதுக்குவீணாக யிழவுக்கொடுக்குரீர்கள்
என்னைப்பிடித்திப்படி யிமிசைகள் செய்குரீர்கள்
பேயுமில்லைபயித்தியமில்லை பேசயெனக்கொன்றுமில்லை
வீணாகயெந்தனையேன் வாதித்துவிடுகிரீர்கள்
என்றுயவர்களுக்கு யிரக்கமுண்டாகும்படி
நான்கற்றவித்தையெல்லாம் நலமாகக்காட்டியுமே
என்னத்தையானுமிரத்து மேந்திழையே யெந்தனுக்கு
பொல்லாங்கேயாச்சுதெல்லா புகலக்கேள்தங்கையரே
நன்மையனுக்கூலம் நாடாமல்போச்சுதம்மா
இன்னமுமென்குறையை யியம்புவேன்கேட்டிடுவீர்
நானும்யென்புருஷனோடு நலமாகத்தான்கூடி
இருக்கின்றகாலமதில் யெனக்குக்கெர்ப்பமுண்டாகி
இருப்பதுவுமெந்தனுக்குத் தெரியாமலிருந்ததப்போ
இப்போகெற்பச்சின்னங்கள் எனக்குமேதோன்றியதால்
கர்ப்பிணியாயிருக்கின்ற கன்னியெனக்குமேதான்
மருந்துக்கொடுப்பதுவும் சரியல்லவென்றுமேதான்
வணங்கிவைத்தியருக்கு வாகாய்த்தெரியவித்தேன்
அப்போதுதாநெலவோ யறைகுவேன்கேள்தங்கையரே
கருப்பணிநானென்றுத் தெரிந்தமாத் திரத்திலேதான்
என்னுடையமாமியற்கு மீடழிவாள்நாத்தியற்கும்
என்னமாயப்பொழுது யிருந்ததென்றால்கேளுமம்மா
அன்றைக்குத்தானவர்கள் ஆளநிறந்தாப்போலும்
எண்ணுதுமெண்ணியவர் யேக்கம்பெருதாகியல்லோ
துக்கசாகரத்திலவர் தோய்ந்தமிழ்ந்துநின்றுவாடி

முன்னிருந்தவஞ்சத்திலும் மூன்றுபங்கதிகமாக
என்னைப்பகைக்கவுமே யெடுத்து துஜங்களுமே
ஆரம்பஞ்செய்தெலவோ அடங்காரமாமிநாத்தி
என்னுடையக்கெர்ப்பமதை யெந்தவிதமேனும்
அழிக்கவேணுமென்று யவர்மனதிலெண்ணங்கொண்டு
வைதியற்குத்தானோதி வஞ்சகமாமிநாத்தி
அவிழ்தப்பிறைபோகம் அவர்களைச்செய்யும்படி
எத்தனம்செய்துமல்லோ யிவர்களிருக்கையிலே
எண்ணத்திலிடிவிழுக யியம்புவேன் கேளுமம்மா
இராக்ஷதருக்குமொருப் புரோகிதருண்டாமென்று
சொல்லுக்குமெய்யாக சோதனையாகவேதான்
என்னுடையமாமியாரை எழிலாயுடக்கத்தக்க
சாமியாரொருவர்வந்துச் சதுராகத் தான்சேர்ந்தார்
அவராரோவென்றலோ அரியவே சொல்லுவன்கேள்
என்னுடையதகப்பனுர்தான் ஏந்திழையே தங்கைமாரே
அவருமேயென்னுடைய அலங்கோலந்தன்னைபார்த்து
பார்த்தவுடனேயவர் பதரியுள்ளங்கலங்கி
எந்தனைக்கட்டிக்கொண்டு யென்தகப்பன்தான்கதறி
மகளென்கோரத்தைக்கண்டு மாருத்துயரமுற்று
மனதைநிருத்தியவர் மருமத்தை யறியவென்று
எந்தன்முகத்தையவர் யேரெடுத்துத்தான்பார்த்து
எனக்குப்பயித்தியமா யல்லவா யென்றுமேதான்
நிட்சயிக்கும்பொருட்டு நேராகயென்தகப்பன்
என்னையும்பார்த்தலவோ யின்னங்கேள் தங்கையரே
பலபலகேழ்வியென்னை பரிட்சையுடன் தரன்கேட்டார்
அவைகளுக்குநானுமேதான் அடவாகவப்பொழுது
தகுதியாய்மறுமொழிகள் தான்சொன்னதுந்தவிர
என்னைப்படித்திவந்த யிமிசைகள்யாவையுமே
பாதகிமாமிநாத்திப் பண்ணக்கொடுமைகளை
நடந்தக்காரியங்களை நன்றாகத்தானெடுத்து
ஆதியோடந்தமாக அனைத்தும்சுருக்கமதாய்
அறியவே தகப்பனுர்க்கு யாவும்தெரியவித்தேன்

தெரிவித்த விபரமதை தானுரைப்பேன் தங்கையரே
என்னவென்றாலதனையுமே எடுத்து உரைக்கிறேன்கேள்
மாமிநாத்தினியவர்மே மருமமதாகவேதான்
அதிகமாக்குற்றமொன்றும் யானெடுத்து சொல்லாமல்
தாமக்கோளாகவேதான் தானவர்கள் செய்ததெல்லாம்
இரண்டொருகாரியங்க ளெடுத்து வெளியுமிட்டேன்
அப்போதுயென்தகப்பன் ஆற்கவேயாலோசித்து
எந்தனுக்குமல்லோ ஏந்திழையே சொல்லுவன்கேள்
பயித்தியமில்லைசயித்தியமில்லைபசாசுமில்லைஎனவரிந்து
என்தகப்பனறெலவோ ஏந்திழையேயக்ஷணமே
எந்தனுக்குமாமிநாத்தி யெழிலாகப்பூட்டிவைத்த
கைவிலங்குகால்விலங்கை கண்டிக்கவாரம்பித்தார்
அப்போதுதங்கையரே யரும்பாவியென்மாமி
உடனேயெழுந்திருந்து ஓடிவந்து அவசரமாய்
என்தகப்பனருடனே ஏதுரைப்பாளப்பாவி
அண்ணுவேயண்ணுவே அருமையுள்ளயண்ணுவே
அவசரப்படவேண்டாம் பொருங்கள்பொருங்களண்ணு
நீங்கள்செய்வதையிப்போ யோசித்துசெய்யுமண்ணு
ஆக்கப்பொறுத்தவரும் ஆறப்பொருங்களண்ணு
ஆஞ்சியோஞ்சிப்பாருமண்ணு யல்லாந் தெரியுமண்ணு
இப்போதிவள்தனக்கு யியம்புவேன் கேளுமண்ணு
விலங்கைநிவர்த்திசெய்தால் வெகுமோசம் நேருமண்ணு
ஆறையாவதுயவள் உபத்திரஞ்செய்வாளண்ணு
என்றுமேயென்மாமி யியம்பிடவப்பொழுது
அம்மொழிதான்கேட்டு அருமையுள்ள என்தகப்பன்
கண்கள்சிவந்தெலவோ கடுங்கோபந்தானுகி
மீசைதுடிக்கவல்லோ முன்கோபத்தோடவரும்
என்னுடையமாமியாரை எட்டியுதைத்தாரப்போ
அப்போதுப்பாதகியும் அலறியேதானுமல்லோ
எட்டுக்குட்டிக்கரண மிட்டெல்லோதான்விழுந்தாள்
குட்டிக்கரணம்போட்டுக் கீழேயவள்விழவே
அப்போதுநானுடனே யடவாகத்தானுமல்லோ

என்தகப்பன்கால்களையு மிருகையரல் பிடித்துக்கொண்டு
எய்தவனை நோகாம லம்பைநோவதுபோலும்
அப்போதுதகப்பனுர்க்கு யானேதுறைத்தேனென்ருல்
எல்லாங்கடவுள்செய லாகவேதானிருக்க
எத்தனிடமாமியார்மேல் பேனுேதானிப்பொழுது
கோபித்துக்கொண்டதினு லென்ன பிரயோசனம்
ஏதோநான்பாவஞ்செய்து யிருந்தபடியினுலே
துஷ்கிருத்தியங்களும் தோஷஞ்செய்தவளாலே
கடவுளுமென்னையிப்போ கண்டுதண்டித்தாரையா
என்னுடையஅத்தையை நீர்மொத்த வேண்டாமையா
பேணியென்தந்தைதனைப் பிரார்த்தித்தே னப்பொழுது
அவரும்மனமிரங்கி அடவாகயே துரைப்பார்
கேளாயென்புத்திரியே கிழவியுடசேதிதன்னை
என்னையும்நோக்கியவள் யெழிலாகத் தானுமல்லோ
பெட்புடனேவந்துமல்லோ பெண்ணது கேட்டபோது
இவளுடையதுர்க்குணங்க ளெனக்குமிகத்தெரிந்தேன்
பெண்கொடுக்க மாட்டேனென்று பேசிநிராகரித்தேன்
அப்போதவளுமல்லோ அழுதுமிகவாடி
மாராத்துயரமுற்று மறுபடியுந்தானுமல்லோ
ஆயிரந்தரமல்லோ அவள்வாயுமோயாமல்
கெஞ்சிகெஞ்சியெந்தனையும் கேட்டுக்கொண்டதினுலும்
சகோதரியாளென்றச் சார்பானபட்சத்தாலும்
கூடப்பிறந்தாள்மனம் நோகப்போகாதேயென்றும்
எண்ணியேதானுமல்லோ யிசைந்தெல்லோ யறியாமல்
கீர்த்தியுடன்யீன்றெடுத்து கிளிபோலேயான்வளர்த்து
பூனையுடக்கைதனிலே பிடித்துக்கொடுத்ததுபோல்
உன்னைவிவாகஞ்செய்து அறியாமல் நான்கொடுத்தேன்
தெரியாமலான்கொடுத்தேன் திண்டோளி கையிலுன்னை
அதற்கிதுலாபமாச்சு தென்றெல்லோயவர்சலித்து
என்தகப்பனுறுமல்லோ யிருக்கின்றவேளையிலே
அப்போதுயென்கணவர் அடவாகத் தானும்வந்து
என்னுடையதகப்பனுற்கு யெழில்நமஸ்காரஞ்செய்தார்

அப்போதையென்தகப்பன் அவரையுந்தான்பார்த்து
விந்தையுடனப்பொழுது விளங்கவேயேதுகேட்பார்
சௌரியவானென்று நீ சதுராய்ப்பேர் வைத்துக்கொண்டு
உன்வீட்டுப்பெண்டுகளை யுனக்கடக்கத் திரமையில்லா
என்னைவரும்படியாய் பெழுதினையே பலகடிதம்
ஓயாமலெழுதினையே யுத்தமனே நீயுமப்பா
துர்ப்பலமுள்ளயிந்த ஸ்திரீகளிரண்டுபேறை
அடக்கசக்தியில்லாத ஆண்பிள்ளையானவ நீ
உத்தரங்கமதனில் உத்தமனே நீயுமப்பா
எவ்விதமாய்ச்சத்துருகளை எப்படி நீஜெயிப்பாய்
என்றெல்லோயென்தகப்பன் எடுத்துமிகக்கூறி
பற்பலவார்த்தையாகப் பரியாசஞ்செய்யலுற்றார்
அப்போதுக்கேளடியே யருமையுள்ள தங்கையரே
என்புருஷனானுமல்லோ என்தகப்பனார்தனக்கு
கருத்துடன்தானுமல்லோ கடிதங்கள்தானெழுதி
வரவழைத்ததாக வாகாகவப்பொழுதும்
என்தகப்பனாருடைய பெழிலானவார்த்தைகளால்
வெளியிட்டசெய்திதன்னை விளங்கவேயான்கேட்டு
சந்தோஷந்தானாகி சரீரங்கள்பூரித்தும்
என்னுடையத்துயரமெல்லா மெங்கையேதான்பறந்து
என்புருஷன்மீதினிலே யியம்பக்கேள்தங்கையரே [ம்
இருந்தமனஸ்தாபமெல்லா மெங்கையோவப்பொழுதே
ஒருகடிகைக்குள்ளாக ஓடிப்பறந்ததுவே
அக்ஷணமேயென்விலங்கை அடவாகத்தானுமல்லோ
கழட்டியெரிந்தார்கள் கடுகெனவேயப்பொழுது
என்னுடையமாமியாரும் எனக்குநேமித்திருந்த
விடுதியைவிட்டுயென்னை விடுதலைசெய்தார்கள்
உடனேபயித்தியமும் ஓடித்துலைந்ததுவே
பேயும்பறந்ததுவே பாவிமாமிக்கலங்க
பழையப்படியாய்நான் பார்க்கவேதங்கையரே
என்னுடையப்புருஷனுடன் எழிலாகத்தானுமல்லோ
அடிக்கடிச்சந்திக்கவும் அவருடன்சம்பாஷிக்கவும்

அன்போடுத்தானுமல்லோ யானுமேயாரம்பித்தேன்
இரவினில்சயனிக்கும் யென்புருஷன் பள்ளிக்கேநான்
பாராக்கொடுத்திருந்தப் பாவிமாமிநாத்தியரும்
சனியன்துலைந்ததுபோல் அவருந்துலைந்தார்கள்
என்தகப்பன்வந்தமுத லிப்பாவியிருவர்களும்
பெட்டியில்பாம்பதுபோல் பேசாதடங்கினார்கள்
இப்படிக்காகவல்லோ யிருக்கின்றநாளையிலே
என்னுடையக்கெர்ப்பமது எழிலாகத் தான்முதிர்ந்து
பத்தாமாதத்தினிலே பரிவாகத்தங்கையரே
பாலசூரியனைப்போல் பாலகனைப்பெற்றெடுத்தேன்
கண்டுமகிழ்ந்தெலவோ காணவேதங்கையரே
மனமகிழ்ந்துப்புருஷனோடுமங்கையரேவாழ்ந்திருந்தே
என்றெல்லோகுணபூஷணி யியம்பிமுடித்தாளே. [ன்



# பொது.



எழிலாகயிப்புவியி லியம்புவேன்கேட்டிடுவீர்
இந்தக்கதையதனை யெடுத்துப்படித்தோரும்
சித்தமுடன்வாசிக்க செவிகொடுத்துக்கேட்டவரும்
இந்துக்களானதொரு யானதோர்நம்மவர்க்கும்
நமதுதேசத்தாரும் நண்ணுவதென்னவென்றால்
ஸ்திரீகளைபற்றியல்லோ சிறக்கவே தான்மிகவும்
அறியவுலகுதனில் அவமதிக்குறார்களென்றும்
விள்ளயெவர்களுக்கும் விளங்குகின்றதேயலவா
அதனையறியவேதான் அறைகுவேன்கேள்புவியோரே
விளங்கக்குடும்பத்திலோர் விவாகமதானபெண்ணும்
மகிட்சியுடன்தானெலவோ மாமியார்வீடுதனில்
நூதனமாகவேதான் வந்துநுழைந்தபின்பு
இல்லறத்தைஅனுஷ்டித்து எழிலாகத் தானுமல்லோ
தன்னுடையப்புருஷனோடு தக்கப்படியாக

அன்புகள்பாராட்டி அறிவையர் நடப்பதுவை
பார்த்துசகியாமல் பகறுவேன்கேட்டிடுவீர்
நாற்றிமார்மாற்றுன்றாய் நண்ணியவோரகத்தி
இவர்கள்முதல்லானவரு லியம்பிடக்கேட்டிடுங்கள்
போருமைவஞ்சனைகள் பிடித்துவருகிறதை
பரிவாரகத்தானுமல்லோ பார்த்துவருகின்ற
அக்கம்பக்கத்திலுள்ள யானவீட்டுக்காரர்களும்
சொந்தங்களுள்ளயின்னம் சுற்றத்தார் மற்றவரும்
அவமதிப்பாகப்பேச அவர்க்குமிட மாகிறது
அதினலேஸ்திரீகளிடப் பெருமைக்குறைகிறது
அதுவுந்தவிரவேதா னறைகுவேனின்னமுங்கேள்
மருகிகளானவரை மாமியார்வீட்டாரும்
குரூரமமாகவேதான் கொண்டுநடத்தலினல்
மாதுயவர்களுக்கு மனவூக்கமுமழிந்து
பேயும்பயித்தியமும் பிடித்தவர்கள்போலும்
மாதுயவர்களுமே மருளுகையிற்சொல்லுவேன்கேள்
காட்டேறிசங்கிலிமுனி கருப்பண்ணன் முதலியதோர்
துஷ்டதேவதை தொடர்ந்துக்கொண்டதுவோஎன்றும்
பலவிதமானப்பேய்கள் பற்றிப்பிடித்ததென்றும்
பேரதுத்தான்வகித்துப் பேசியே நிட்சயத்தும்
வயறுவளர்க்கின்ற வரும்பாவியானதொரு
பூசாண்டிவேசாண்டி பூசாலியானதொருக்
கொடும்பாதகரையழைத்துக் கூசாமலவர்கள்கையில்
ஒன்றுமறியாமல் ஒப்பிவித்துவிடுகுறார்கள்
அதுவேசமையமென்று அக்கொடும்பாதகர்கள்
திருநீரென்னுமொரு தேடியச்சாம்பலுடன்
பூனைகாஞ்சலென்னுமொரு பொல்லாத மூலிகையை
சேர்த்துவிபூதியுடன் செய்கின்றசூதைக்கேளீர்
ஸ்திரீகளின்மீதிலேதான் சிராகத்தூவிவிட்டும்
சாம்பிராணிப்புகையினிலே சாற்றுவேன்கேட்டிடுவீர்
பேய்மிரட்டிவேரதனை பெட்புட னிடித்தலவோ
கூடக்கலந்துப்புகைக் கொப்பெனவேதான்காட்ட

உடுக்கையைத் தட்டிக்கொண்டு ஓகோகோதாயேஎன்றும்
பிரம்பாலும்தோல்வாராலும் பெருத்ததடியினாலும்
குரூரமாகவேதான் கொண்டமட்டும்மடித்தும்
மட்டுமரியாதை மதிப்புகள்வையாமலும்
அவமரியாதையாக யவர்களுமப்பொழுது
தங்கள்வாயில்வந்தபடி தாறுமாருய்பேசுருர்கள்
ஐயோயதற்குமேதான் அப்பெண்களென்னசெய்வார்
தங்களிடமாமிவீட்டில் தானவர்களடைகின்ற
கஷ்டங்கள்போதாமல் கழறுவேன்கேட்டிடுவீர்
கூறயெவர்களுமே கொடியச்சண்டாளரான
பொல்லாதப்பாதகராம் பூசாலிகளிடத்தில்
நேரும்மிமிசைக்கு நங்கையர்களும்பயந்து
பூசாலிச்சொற்படிக்குப் பேய்போலேதானுடி
தங்களுடக்கஷ்டங்களை தான்சகித்துக்கொள்கிருர்கள்
எவற்குஅடுக்குமிது யிதுயென்னேப்பரிதாபம்
ஆற்குஅடுக்குமிது அய்யோவெகுதோஷம்
நாட்டினில்வாழுகின்ற நம்மவர்கள்தானுமல்லோ
சற்றுகிலும்ஸ்திரீயின்மேற் சார்ந்துமனமிறங்கி
சாந்தமோடுதானுந் தாமிருக்கலாகாதா
உலகினில்வாழுகின்ற உற்றதோர்மனிதரையும்
பிடித்துமேகொள்ளுகின்ற பேயும்பிசாசுமுண்டா
ஏனேயிதின்பேரில் இப்படிநம்பிக்கைவைத்து
நண்ணியேவாழுகின்ற நமதுதேசத்தவரும்
வீணைகயெண்ணியெண்ணி விருதாவாய்த்தானுமல்லோ
மோசத்திலும்பெறிய முழுமோசம்போகவேண்டும்
காசினிதன்னிலேதான் காணவேஸ்திரீகளுமே
சாந்தமனமிறக்க முள்ளவர்களாதலினுல்
அவர்களுக்குத்தான்னேரும் அடவானகஷ்டமதால்
மனகுழப்பமுண்டாகி மவருந்தவிப்பதன்றி
வேரேபேயுமிருந்து வந்தவர்களைப்பிடித்தும்
ஆட்டுகுதுயென்றசொல்லு அதுவீண்தப்பாகையாலே
அறிவாளரிதையறிந்து அன்பாகஸ்திரீகளையும்

அவர்களுடைய்யதொரு யூான நிற்பாக்கியமாம்
ஸ்திதியிலிருந்துமல்லோ தா நீக்கவேண்டுமென்றும்
எண்ணுகுறோமெண்ணுகுரோம் யாவருமுயலவேதான்
மருமக்கள் துயர் நீங்க மானிலந்தழைத்தோங்க
பாடிப்படித்தவரும் பரிவாகக்கேட்டவரும்
சொல்லிப்படித்தவரும் சுத்தமுடன் கேட்டவரும்
எல்லையுலகளந்த பெம்பெருமாள்கோத்திரம்போல்
நீடியுலகமீது நெடுநாளும்வாழிவாழி
வாழிவாழியென்று வரமளித்தாரீஸ்வரனார்.

## மருமக்கள் துயர அம்மாவனை

முற்றுப்பெற்றது.

சம்பூர்ணம்.

உ

கடவுள் துணை.

புதிதாய் அச்சிட்ட

(உக) கதைகளடங்கிய.

# கலியுகவினோதகதை.



இதிலடங்கிய கதைகளானது இதுவரையிலும் யாவராலும் அச்சிடாத தும் யாவரும் கேட்டிராததுமான அதிகவினோதமாகியகதைகள்.

1. வது, சாஸ்திரத்தைநம்பி ஜெயமடைந்தவன்கதை. 2. வது, விவேக மற்ற வீரகோபாலன்கதை. 3. வது, ஸ்ரீதேவிக்கும் மூதேவிக்கும் வழக்குண் டானகதை. 4. வது, கொண்டவனைக்கொல்லநினைத்த குண்டோதரிக்கதை. 5. வது, வர்த்தகக்குமாரன் வேசியால்கெட்டகதை. 6. வது, வெரிமுண்ட கொடுக்குக்கதை. 7. வது, புகையிலையின்மருத்துவக்கதை. 8. வது, சோதி வல்லவன்கதை. 9. வது, பிராமணப்பெண்கதை. 10. வது, வயித்தியன்கதை. 11. வது, சுயம்பாகிக்கதை. 12. வது, சந்தியாவந்தனக்கதை. 13. வது, ... பத்தன்கதை. 14. வது, மூக்கரையன்கதை. 15. வது, ஆயிரம்புளுவன்கதை. 16. வது, அரக்கமாட்டதவன்சூத்தில் அன்பத்தெட்டறுவா ளென்றகதை. 17. வது, பெண்பார்க்கும்தூதன்கதை. 18. வது, பிராமணன் பூனையாகப் ... ந்தகதை. 19. வது, கெட்டகுமாரன்கதை. 20. வது, மதிகெட்டான்கதை. 21. வது, வைராக்கியராஜ குமாரன்கதை. இவைகள் அடங்கியது,

புஸ்தகம் 1-க்கு விலை அணா-8.

---

# சத்தியவசனிசரித்திரம்.

## இது ஓர் அற்புத ஆனந்த

(கதா ரசக்யானம்.)

நண்பர்காள்!

உலகில் வசித்துலாவும் மாந்தர்களின் மனதைச் சீர்திருத்தஞ் செய்யு படியாக அறிஞரா லியற்றிய அநேக கதா ரசக்யானங்களை வாசித்திருப்பி னும் தற்சமயத்திற் கோர் அஸ்த பூஷணம்போல் சிறப்பெய்தி வையத்தோ ர்க்கறிவுறுத்தும் அற்புதானந்த கதா ரசக்யானமாகிய இந்த சத்தியவசனி சரிதையை வாசிப்போர் யாதாமொரு சபையிலுஞ்சென்று சாதுர்ய வார்த் தையாடுதற்கும் வஞ்சகர் செய்யும் தந்திர மோசங்கட் கஞ்சாமல் கீர்த்தி பிரகாசமாய் வாழ்ந்திருப்பர் அன்றியும் இதைவாசிக்குந்தோறும் வேடிக்கை கதாசாரமாயிருப்பினும் நன்மதி விளங்கும் நவரசலங்காரமா யிருக்கும்.

புத்தகம் 1-க்கு விலை அணா-8.

ஒரேதகுதியில் பத்துபுத்தகம் மொத்தமாய் வாங்குபவர்கட்கு இரண்டு புத்தகம் இனமாக கொடுக்கப்படும்.



இப்படிக்கு.

ஸ்ரீ பூ. சு. கோவிந்துராஜு முதலியார்.

சூளை போஸ்ட் மதராஸ்.

